



பெருஞ்சித்திரனார்

# கொய்யாக்கனி

பாவியம்







**கொய்யாக்கனி**

பாவியம்

**முதற்பதிப்பு :** தி. பி. ௧௯௮௭ சிலை ௧௭; *(1-1-1956)*

**இரண்டாம்பதிப்பு:** தி.பி. ௨௰௧௩ மடங்கல் ௧௬; *(1-9-1982)*



**விலை :** உரு. 25.00



**தென்மொழி அச்சகம்,**
**சென்னை-5.**



# வரலாற்று முன்னுரை

என் பள்ளி வாழ்க்கையில் பன்னிரண்டு பதின் மூன்றும் அகவையில் (1945-46) **'மல்லிகை'** என்றொரு பாவியம் எழுதினேன். என்னுடைய முதல் பாவிய மலர்ச்சியும் அதுதான். அக்கால் நான் எட்டாம் ஒன்பதாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தேன். இப் பாவியத்தை யடுத்து, என் பதின் மூன்று, பதின் நான்காவது அகவையில் எழுதப்பெற்றது **'கொய்யாக் கனி'** எனும் இப் பாவியம். இதற்கு அப்பொழுது நான் இட்ட பெயர் **'பூக்காரி'** என்பது.

ஒவ்வொரு நாளும் தவறாமல் கைக்குக் கிடைத்த எந்த நூலையாவது படிப்பது, பாடல்கள், கட்டுரைகள் எழுதுவது, அவ்விளமைப் பொழுதிலேயே என்னுடன் ஒட்டியிருந்த செயல்கள். நினைவு தெரிந்து, ஐந்தாம் வகுப்பிலேயே, அஃதாவது என்னுடைய ஒன்பதாம்

அகவையிலேயே எழுதத் தொடங்கி விட்டேன். கையெழுத்து இதழாசிரியனாகவும் இருந்தேன். நான் நடத்திய **குழந்தை** என்னும் கையெழுத்திதழை அப்பொழுது விரும்பிப் படித்தோர் என்னையொத்த மாணவர்கள் பலர் ஆவர். 'குழந்தை' ஆசிரியர் என்றே என்னை அவர்கள் அழைப்பார்கள். '**கௌளி**' என்பது அப்பொழுது நான் வைத்துக்கொண்ட புனைபெயர். '**அருணமணி**' (மாணிக்கம்) என்பதும் இன்னொரு பெயர். அக் காலத்திலேயே எனக்கு நிறைய சுவைஞர்கள் இருந்தனர். அவர்களுள் தீனதயாளன் என்பவன் எனக்குக் கிடைத்த தலையாய சுவைஞன். தெலுங்கைத் தாய்மொழி யாகக் கொண்ட அந் நண்பன், நான் ஒவ்வொரு நாளும் எழுதிய கதை, பாடல்களைத் தவறாமல் படிக்கச் சொல்லிக் கேட்பான். சிலநேரம் அந்தப் பணிக்கென நான் அவனுக்குத் தின்பண்டங்கள் வாங்கிக் கொடுத்து, என் எழுத்துகளைப் படித்துக் காட்டி வந்தேன். படிக்கும்பொழுது அவர் கொட்டிய 'ஆஆ, ச்சூ ச்சூ' போன்ற ஒலிகள் இன்னும் என் செவிகளில் ஒலித்துக் கொண்டுள்ளன. அவன் என் எழுத்துகளை மெய்மறந்து கேட்டுச் சில நேரங்களில் வாய் விட்டுச் சிரிப்பான்; சில கதைப்போக்குகளைக் கேட்டுக் கண்ணீர் வடிப்பான்! அந்த இளம் சுவைஞனை என் வாணாள் உள்ளவரை என்னால் மறக்கவே முடியாது. இன்றும் அவனை நினைந்து நன்றியுடன் போற்றுகின்றேன். மனத்தால் வணங்குகின்றேன். அவன் வடித்த கண்ணீராலும், நகை முழக்கத்தாலும் வளர்ந்த பாவியங்களே மல்லிகையும் இக் கொய்யாக்கனியும் ஆகும்.

1951-52இல், என் கல்வியை ஒருவாறு முடித்துக் கொண்டு வேலைக்கு அலைந்தேன். அப்பொழுது எனக்குத் திருமணமும் ஆகியிருந்தது. என் மூத்த மகள் பொற்கொடியும் அப்பொழுது பிறந்திருந்தாள். சில காலம் கூட்டுறவுத்துறையில் பணியாற்றிய பின் மீண்டும் வேலைக்கு அலைந்தேன். அதற்குள் இரண்டாவது குழந்தையாக என் மூத்த மகன் பூங்குன்றனும் அக்கால் பிறந்து விட்டான். என் தந்தையார் எனக்கு எப்பொழுது வேலைகிடைக்கும் என்று கணியமெல்லாம் பார்த்தார். கணியர் ஒருவர் என் மகன் பிறந்த ஒன்பதாம் மாதத்தில் எனக்குக் கட்டாயம் நிலையான வேலை கிடைத்துவிடும் என்று கூறியிருந்தாராம். இருப்பினும் இடைக்காலத்தில் ஒரு வேலை கிடைக்குமென்றும், அது நிலைக்காது என்றும் அவர் கூறியதாகத் தந்தையார் என்னிடம் கூறி என்னைத் தேற்றி வந்தார்.

அவர் கூறியது போலவே, 1954 ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் ஓசூர் பக்கத்தில், அன்செட்டி என்னும் யானைக்காடுகள் நிறைந்த பகுதியில், கான் துறையில் தன்னந் தனியான அலுவலகம் ஒன்றில் எழுத்தராகச் சில நாட்கள் பணி செய்தேன். அந்த வாழ்க்கையெல்லாம் சுவை மிகுந்தது. அதைத் தேவைப்படும்பொழுது எழுதுவேன்.

இறுதியாகக் கணியர் கூறியபடியே, என் மகன் பூங்குன்றனுக்கு ஒன்பதாம் மாதம் தொடங்குகையில், (1954) புதுச்சேரியில் அஞ்சல் எழுத்தனாகப் பணியேற்றேன். **பாவேந்தர் பாரதிதாசனாரின்** நெருங்கிய நட்பு கிடைத்தது. அன்னாரிடம் அலுவல்

முடிந்ததும் பாவேந்தர் வீட்டில்தான் என்னைப் பார்க்கலாம். அக்கால் அவருடைய உண்மையான உள்ளத்தன்மையும், நம்பிக்கையையும் நிறையப் பெற்றிருந்தேன்.

1954-இல் பாவேந்தரிடம் நிலையான தொடர்பு ஏற்படுவதற்கு முன்பே 1951-இல், ஒருமுறை பாவேந்தரிடம் புதுவைக்கு என் **மல்லிகை** பாவியத்துடன் அவரைப் பார்த்து மதிப்புரை வாங்க வந்திருந்தேன். ஆனால், ஏதோ காரணத்தால் அந்தச் சந்திப்பு வெற்றி தரவில்லை. இது பற்றி என் **'கனிச்சாறு'** பாடல் தொகுப்பில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளேன்

ஆனால், 1954-இல் மீண்டும் புதுவை வந்து பாவேந்தர் நட்பு நெருங்கியிருந்தபொழுது, **1955** தொடக்கத்தில் **கண்ணதாசனின் 'தென்றல்'** இதழில் ஓர் இலக்கியப் போட்டி ஒன்று அறிவிக்கப் பெற்றிருந்தது. அதில் தேர்ந்தெடுக்கப்பெறும் பாவியத்திற்கு ஆயிரம் உருபா பரிசு என்றும் அறிவித்திருந்தார்கள். அப் போட்டிக்குத் தேர்வாளராகப் **பாவேந்தர்** அமர்த்தப் பெற்றிருந்தார். அந்தப் போட்டி அறிவிப்பு வெளிவந்தவுடன் ஒருநாள் மாலை, பாவேந்தர் என்னிடம் 'போட்டி வந்திருக்கிறது, தெரியுமா' என்று கேட்டார். 'தெரியும்' என்றேன். 'நான்தான் தலைவன்; நீ எழுது; உனக்குத்தான் பரிசு; வேறுயாருக்குத் தரப்போகிறேன், நான்' என்று முத்தாய்ப்பு வைத்து விட்டு, 'இதுவரை ஏதாவது பாவியம் எழுதி வைத்திருக்கிறாயா?' என்றார். நான் உடனே, 'ஆம்' என்று கூறிவிட்டு, மல்லிகை, பூக்காரி

இரண்டையும் பள்ளி மாணவப்பருவத்திலேயே எழுதி வைத்திருப்பதாகவும், அவற்றுள் '**பூக்காரி**'யைப் போட்டிக்கு அனுப்பலாம் என்றும் அவரிடம் தயங்கித் தயங்கி கூறினேன்.

உடனே, 'அதை எடுத்துக்கொண்டுவா' என்று கட்டளை போட்டார். அதன் பின்னர்ப் 'பூக்காரி'யின் பழந்தாள்தொகுதி, மீண்டும் சரிசெய்யப் பெற்றது; சில திருத்தங்களுடன் அன்பர்களைக் கொண்டு, ஒரு கிழமைக்குள் செவ்விதாகப் படியெடுக்கப் பெற்றது. அதில் தலையாய திருத்தமாகப், '**பூக்காரி**' என்று அதற்கிட்டிருந்த பெயரைக் '**கொய்யாக்கனி**' என்று மாற்றம் செய்தேன்.

'கொய்யாக்கனி' என் கழியிளமைப்பொழுதி லேயே எழுதப் பெற்றதால், அவ்விளமைப் பொழு தில் எனக்கிருந்த அறிவுணர்வு, செய்யுளுணர்வு, யாப்பமைதி, யாப்பிலக்கண அறிவு, சொல்லாட்சி ஆகியவற்றில், பல வளர்ச்சி பெறாத நிலைகள், அதைச் சரிசெய்ய முற்பட்ட பொழுது, எனக்குத் தெள்ளத் தெளிவாகத் தெரிந்தன. தூய தமிழுணர்வு அக்காலத்திலேயே என் உள்ளத்தில் கால் கொண்டி ருந்தாலும், போதிய தமிழறிவு வாயாதிருந்தமை யால், நூல் நெடுகலும் பற்பல வடசொற்கள் கலந்தி ருந்தன. அவற்றால் பெருவருத்தமும் அடைந்தேன். பல வடசொற்கள் பல பாடல்களின் எதுகைத் தொடையிலேயே வந்து இடர்தந்து நின்றன.

எனினும் அவற்றை மாற்றித் தூயதமிழ்ச் சொற்கள் பெய்வதற்கு நான் விருப்பம் கொள்ள

வில்லை. இஃது உரைநடை நூலாக இருந்திருப்பின் ஒருவாறு அதனை, வேறு எந்த அடிப்படை உணர் வையும் பொருட்படுத்தாமல், செய்திருப்பேன். பாடல் நூல் ஆனதால், அந்தக் காலத்துப் பிஞ்சுணர்வின் வெளிப் பாட்டில் கைவைத்து, அதனை முற்றிமுதிரப் பிசைந்து கனியாக்குவது, சரியென்று எனக்குப் படவில்லை. அஃது என் குழந்தைப் பருவத்துக் கற்பனைக் கனவின் வடிவத்தைச் சிதைப்பதாகவே எனக்குப் பட்டது. முற்றி முதிராத என் தளர் நடைப் பருவத்தில், என்மேல் மொய்த்திருந்த தாறு மாறான தமிழ் வடிவங்களின் செப்பம் பெறாத மழலைச் சொற்களை, அறிவுணர்வால், திருத்தமுறச் செய்வது- என் இயற்கையான படிநிலை வளர்ச்சி வெளிப்பாட்டைக் குலைப்பது- எவ்வகையானும் எனக்குச் சரியாகப் படவில்லை.

தத்துப்பித்தென நான் பேசிய கொச்சைக் கதம்ப மொழியின் நடையைக் கொண்டும், சொற் குச்சிகளைக் கொண்டும், இளமையில் கட்டிய ஓர் அரிய பாவியக் கூட்டை, வளர்ந்து முதிர்ந்த பருவத் தில், என் கைக்கு வரப்பெற்ற கொள்கை வாளால் வெட்டிச் சிதைப்பதை, என் இயற்கை உள்ளம் வரவேற்க வில்லை. அறிவு வளர்ச்சிக்கேற்ப என் உள்ளத்துமொழி முதிர்ந்து சிறந்ததை, என் குழந்தைப் பருவத்துக் குதலைச்சொற்கள்தாமே கட்டி யங்கூறி, அளவு காட்டி உணர்த்துவிக்க முடியும். என் இளமைப் பருவத்தில் எடுத்த புகைப்படத்தில், இக்கால் வளர்ந்துள்ள என் வடிவத்தில் வந்து

தோன்றிய என் மீசையையும் தாடியையும் எப்படிப் பதித்துவிட முடியும் ?

எனவே, பாவியம், செய்யுள் என்னும் வடிவிற்கு ஒவ்வாத முறையில் அமைந்திருந்த சில பிதுக்கல்களையும், செதுக்கல்களையும், வெட்டியும் ஒட்டியும் மட்டும், திருத்தங்கள் செய்ய வேண்டியிருந்தன. ஆனால், சொற்களை, அவை மரபுநிலைக்குப் பொருந்தாத வகையில் கையாளப் பெற்றிருப்பினும், நான் அடையாளங் கண்ட வடசொற்களாக விருப்பினும், அவை, அற்றைக்கால என் அறிவு வளர்ச்சியைப் புலப்படுத்தும் அடையாளங்களாகவே இருக்கட்டும் என்ற அளவில்-என் இளமைக்கால உள்ளுணர்வின் முற்றி முதிராப் பாடல் வடிவங்கள் இவை என, இன்றோ, பிறகோ, என்னை ஆய்கின்றவர்களுக்கு உணர்த்தட்டும் என்ற வகையில் அப்படியே விட்டு விட்டேன். இவ்வகையில், பாவேந்தரிடம் பழகிய நாட்களில், ஒருமுறை நான் அவரிடம் வினவிய வினவும், அதற்குப் பெற்ற விடையும் ஒரு காரணியம் என்பதால், அதனையும் இங்குக் குறிப்பிடுவது இன்றியமையாததாகின்றது.

'**கொய்யாக்கனி**'யை நான் போட்டிக்கு அணியப்படுத்த முற்பட்டதற்கு முன்னை ஒருநாள், பாவேந்தரின் தொடக்கக் கால நூல்களில், வரைதுறையின்றி வடசொற்கள் பயின்றிருந்த நிலையினை அவர்க்குக் கொள்கையுணர்வுடன் சுட்டிக்காட்டி, 'ஐயா, இந்நிலை, இப்பொழுதுள்ள நம் கொள்கைக்கு மாறானதாக விருக்கின்றதே; தாங்கள் இசைவளிப்பீர்களாயின், இவ் வடசொற்களைக் களைந்து விட்டு,

அவற்றிற்குப் பகரமாகப் பொருத்தமான தூயதமிழ்ச் சொற்களை, நான் பெய்துவிட முடியுமே! செய்யட்டுமா?' என்று கேட்டேன். அவ் வினாவைச் சற்றும் எதிர்பாராத பாவேந்தர், உடனே, 'இல்லை; வேண்டாம்! அவை அப்படியே இருந்து விட்டுப் போகட்டும்! நான் எப்படியெப்படி இருந்து வளர்ந்து, இப்படிப்பட்ட நிலைக்கு வந்திருக்கின்றேன், என்று மற்றவர்கள் விளங்கிக்கொள்ள வேண்டாமா ?' என்றார். அவருடைய விடை எனக்கு மிகவும் சரியாக, இயற்கையை யொட்டியதாகப் பட்டது.

இந்த வகையில், தனித்தமிழ் முயற்சிக்கு ஓர் உந்துகருவியாக விருந்த மறைத்திரு. **மறைமலையடிகளார்** அவர்கள், தம் முற்கால நூல்களைப் பிற்கால் அச்சிடுவிக்கையில், அவற்றிருந்த வடசொற்களை யெல்லாந் தவிர்த்துத் தூயதமிழ்ச் சொற்களாக்கி வெளியிட்ட, பெருந்தகைமையையும் பீடுறு கொள்கைச் செயலையும், நான் நினையாமலோ மதியாமலோ இல்லை. அவர்தம் தமிழ் முனைப்பிற்கு என் ஆதரவும் ஒப்புதலும் பாராட்டுதலும் உண்டு. எனினும் அடிகளார் செய்த, உரைநடைத் திருத்தம் வேறு; நம்மின் செய்யுள் திருத்தம் வேறு.

உரைநடை என்பது நாம் கட்டும் வீடு போன்றது. அதில் செயற்கையின் அறிவாட்சி மிகுதி. எனவே முன்னர்க் கட்டிய வீட்டை இக்கால் புதுப்பிக்கும் வகையில், நாம் இடித்துக் கட்டலாம்; நிலை மாற்றலாம்; புதுப்பகுதியைச் சேர்க்கலாம்; பழம் பகுதியை நீக்கலாம்! ஆனால் பாநடை என்பது, பறவைகள் கட்டும் கூடு போன்றது. அதில் இயற்கை

யின் உணர்வாட்சி மிகுதி. எனவே, ஒரு பறவை யின் கூட்டை, நமக்கேற்ற வகையில் சிதைப்பதும், மாற்றிப் புதுவது புனைவதும், அந்தப் பறவையின் இயற்கை யுணர்வைச் சிதைப்பதைப் போன்றது. உணர்வால் கட்டிய கற்பனை மாளிகையை, அறிவால் திருத்திப் புனைவு செய்வது, மேகத்துக்கு நிறந்தீட்டு வது போன்றதும், மலைக்கு வடிவமைப்பது போன்ற தும், பட்டுப்பூச்சிச் சிறகுக்கு ஓரம் வெட்டுவது போன்றதுமான மனம் பொருந்தாச் செய்கையே யாகும்.

அறிவுணர்வு மிகக் கலந்த பாடல்கள் அற நூலாகி விடும்! கற்பனையுணர்வு மிகக் கலந்த பாடல் களே பாவியங்கள்! எனவே, அன்று வெளிப்படுத் திய உணர்வு முளைகளை, அப்படியே மக்கட்கு வடிவப் படுத்திக் காட்டினேன். அவற்றுள் பற்பல வடசொற்கள் களையப் பெறவில்லை. உணர்வு மாறுத, இயற்கையழகு கெடாத—வகையில் ஆங்காங்கே சில வடசொற்கள்-அறியாப் பருவத்து அறிவுணர்வு மழுக்கச் சொல்லாட்சிகள் - முதலியன உண்டு. அவற்றை அப்படியே விட்டு விட்டேன். பாட்டமைப் பில் கூட அதிகம் கைவைக்க வில்லை. ஒலியமைதி கருதி ஓரிரு சீர், தளைகள் செப்பம் செய்யப் பெற்றன.

இனி, இவ்வாறு திருத்தப் பெற்ற படி, பாவேந் தரின் முன் பார்வைக்கு வைக்கப் பெற்றது. பாவேந் தருக்கு அன்றிருந்த வினையழுத்தத்தில், இன்று, நாளையென்றாகி, ஒருநாள் மாலை 6 மணியளவில், கொய்யாக்கனி படிப்பதற்கு எடுத்துக் கொள்ளப் பெற்றது. பாவேந்தர் முழங்கையை மிசையின்

மேல் ஊன்றியவராய், சுருட்டை மாறி மாறிப்புகைத் தவராய்,மூன்று மணிநேரம் ஈடுபட்டு அதனைப்படித்து முடித்தார். இறுதியில், இங்கொன்றும் அங்கொன்று மாக, அதைத் திருத்தி, "இந்தாப்பா, இதையெடுத் துக் கொண்டு போய்ப் போட்டிக்கென்று விடுத்து விடு" என்று கூறினார். அத்துடன், மூன்று மணி நேரம் ஆடாமல், அசையாமல், இடைவிடாமல் முழங் கையை ஊன்றிப் படித்த வருத்தம் வெளிப்படுமாறு, கையெல்லாம் வலிக்குதப்பா' என்று, கையை உதறிக் கொண்டே கூறினார். அந்த அருங்காட்சி இன்ன மும் என் உள்ளத்தில் பசுமையாக நிழலாடிக் கொண்டிருக்கிறது.

பிறகு, ஏதோ ஒரு காரணத்தால், போட்டிக்குப் பாவேந்தர் தலைமை தவிர்க்கப் பட்டதாக அவர்க்குத் தெரிய வந்தது. அக்கால் அவர் என்னை யழைத்து, 'போட்டிக்கு நீ உன் நூலை அனுப்ப வேண்டாம்; திருட்டுப் பயலுக என்னைத் தலைமையினின்று நீக்கி விட்டானுங்க! உன் நூலை வேறு யாரிடமும் தேர்வுக்கு அனுப்ப வேண்டாம். நான் அதை நம் அச்சகத்திலேயே அச்சுப் போட்டு விடச் சொல் கிறேன்' என்று கூறிவிட்டுத் தம் மகன் திரு. மன்னர் மன்னனைக் கூப்பிட்டு, 'தம்பி, இதை நம் அச்சகத்திலேயே அச்சுப் போட்டுக் கொடுத்துவிடு' என்று கட்டளையிட்டார்.

திரு. மன்னர் மன்னன் அக்கால் என்மேல் அன்பும் பரிவும் கொண்டிருந்தவர். அவர் உடனே, அதனை அச்சேற்றினார். அஃது, அச்சாகி முடியுந் தறுவாயிலிருந்த பொழுது, ஒருநாள் மாலை நான்

பாவேந்தரின் 'பழநியம்மா அச்சக'த்திற்குச் சென்றேன். அக்கால் மன்னர் மன்னன் என்னிடம், "நீங்கள் தலையிடம் (பாவேந்தரை நாங்கள் 'தலை' யென்று சுருக்கமாக அழைத்துக் கொள்வோம்.) ஏதாவது, கொய்யாக்கனிக்கு மதிப்புரை கேட்டீர்களா ?' என்றார். நான் 'இல்லையே, நான் ஏன் மதிப்புரை கேட்பேன் ?' என்றேன். அவர் என்னைக் கேட்டதிலிருந்து, பாவேந்தர் அதற்கு நான் கேளாமலேயே மதிப்புரை ஒன்று எழுதிக் கொடுத்திருப்பார் என்று உய்த்துணர்ந்து கொண்டு மன்னர் மன்னனிடம் அவ்வாறு பிலுக்கினேன். அதற்கு அவர், நீங்கள் கொடுத்து வைத்தவர்தாமய்யா! (அவர் பயன்படுத்திய சொல் 'அதிர்ஷ்டக்காரர்' என்பது.) அருமையான மதிப்புரை ஒன்று எழுதிக் கொடுத்திருக்கிறார். நான் அறிந்த வரையில் அவர் இப்படி யாருக்குமே எழுதிக் கொடுத்ததில்லை; அவனவன் மதிப்புரை வேண்டுமென்று கேட்டுத் தவங்கிடப்பான். இறுதியில் வேண்டா வெறுப்பாக, கிண்டலாகவோ, ஏதோதானோ வென்றோ எழுதிக் கொடுப்பார். இறுதியில் அதையும் வாங்கிக்கொண்டு போவார்கள். நீங்கள் கேளாமலேயே உங்களுக்கு மிகவும் சிறப்பாக எழுதிக் கொடுத்து விட்டாரே; வியப்புதான்! (அவர் பயன்படுத்திய சொல் 'ஆச்சரியந்தான்' என்பது.)' 'என்று' கூறி, மதிப்புரை எழுதியிருந்த தாளை என்னிடம் கொடுத்தார். அதைப் படித்துப் பார்த்தவுடன், பாவேந்தர் என் மேல் கொண்டிருந்த கள்ளமற்ற மெய்யன்பையும், மதிப்பையும் அறிந்து உள்ளம் உருகி நின்றேன். என் கடைவிழிகளில் நன்றிக் கண்ணீர் துளிர்த்தது.

பாவேந்தர் கொய்யாக்கனிக்குக் கொடுத்த மதிப்புரையைப் பற்றி இரண்டொரு சொற்கள் சொல்லியாகல் வேண்டும். நூலைப் பற்றிய செய்தி கொஞ்சந்தான் அதில் வருகிறது. மற்ற செய்தி யெல்லாம் என்னைப் பற்றியதுதான். என்னை அவர் விளங்கிக் கொண்ட தன்மை அவ்வரிகளில் ஆழப் பதிந்திருந்தது. வெறும் சொற்களாக அவற்றைப் பாவேந்தர் பயன்படுத்தி விடவில்லை. அதில் அவர் பயன்படுத்திய ஒவ்வொரு சொல்லுக்கும் ஒவ்வொரு வரலாறு உண்டு; உணர்வுண்டு! அதிலுள்ள அத்தனைச் சொற்களிலும் அவரின் தூயதமிழுள்ளம்–கனிவு நிரம்பிய குழந்தையுள்ளம்-பொறுமையற்ற சான்றாண்மையின் பெருந்தகையுள்ளம்—பதிந்து, மெய்ம்மை சாற்றி நின்றது. அதில் அவரின் சிரிப்பு துள்ளியது; நகைச்சுவை பொதுளி நின்றது; உவகை ஊஞ்சலாடியது; அன்பு குமிழியிட்டது; அறிவு சுடர் வீசியது; என்பால் அவர் வைத்த நம்பிக்கையின் ஈரம் கசிந்து நின்றது! அதில் என் தமிழ் உள்ளத்தையும், அதில் கொப்பளிக்கும் உண்மை உணர்வையும் அதன் சூட்டையும் குளிர்ச்சியையும் வெளிப்படுத்தியிருந்தார்; என் அறிவின் வலிந்த கொள்கையைச் சுட்டியிருந்தார்; அவரொடு நான் பழகிய பண்பு வழுவாத தொடர்பை உறுதிப் படுத்தியிருந்தார்; எல்லாவற்றுக்கும் மேலாக என் எதிர்காலத்தையே வாழ்த்தி நிலைப் படுத்தியிருந்தார்! மொத்தத்தில் அவர் அம் மதிப் புரையில் பயன்படுத்திய சொற்களில், அவரின் பாடல் உள்ளம் கொழுமை கொண்டது. வண்ண மாலைகள், சுடர்க் கற்றைகளை வீசி, ஒரு பாவலனின்

உள்ளத்தை வேறு ஒரு பாவலன் அறியும் படைப்புக் கமுக்கத்தை உலகுக்குப் புலப்படுத்தி யிருந்தார். இவ்வனைத்துச் சிறப்புகளையும் உள்ளடக்கிய அவ் வயிர வரிகள் என் உள்ளத்தில் ஒளி வெள்ளத்தைப் பாய்ச்சி, உணர்வு மூட்டத்தில் மூழ்குவித்தன. இன்று நினைத்தாலும், அன்றைய மாலைப்பொழுதின் தென்றல் வீச்சு என் உயிரைக் குளிர்விக்கின்றது.

பாவேந்தரின் முழு விருப்பத்தின் கீழ்வந்த **கொய்யாக்கனி**யின் முதல் வெளியீட்டுக் கென்று, **பழநியம்மா அச்சகம்** என்னிடம் ஒருகாசும் பெற்ற தில்லை. அச்சிட்ட படிகளில் முந்நூறோ நானூறோ போக, அனைத்துப் படிகளையும், திரு. மன்னர் மன் னன் என்னிடம் தந்துவிட்டார். அவரின் பெருந் தகைமையையும் அன்று அவர் என்மேல் வைத்த பேரன்பையும் இன்றும் நன்றியால் நினைவு கூர் கிறேன். அன்றைய அவர் உள்ளத்தை வாழ்த்து கின்றேன். இன்று அவர் எப்படியோ தெரியவில்லை.

அடுத்து, என் மதிப்பிற்குரிய ஆசான் பாவாணர் அவர்கள் '**கொய்யாக்கனி**'க்குத் தந்த அணிந்துரை பற்றியும் சில குறிப்பிடல் வேண்டும்.

பாவாணர் அக்கால் சேலம் நகராட்சிக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராக விருந்தார். பெரும்பாலும் அவர் ஒரு நூலுக்குத் தந்த முதல் மதிப்புரை இதுவாகத்தான் இருத்தல் இயலும். இதன் பின்னரும் கூட அவர் வாணாளில் வேறு ஓரிரு நூல்களுக்குத்தாம் மதிப்புரை தந்துள்ளார். அவர் **கொய்யாக்கனி**க்குத் தந்த அணிந்துரை மிகப்

பெரியது. கதைச் சுருக்கத்தையும் உள்ளடக்கியது. ஆனால் கதைச் சுருக்கத்தைத் தவிர்த்து, அணிந்துரையின் பிற பகுதிகள் அச்சிடப் பெற்றன. பாவாணர் கொய்யாக்கனியின் நூல் முழுவதையும் படித்தார். கதைச் சுருக்கத்தை எழுதினார்.

இதில், அவர் என்னைப் பற்றிக் கூறிய முன்னறிவிப்பு வரிகள் மிகவும் திட்பநுட்பம் சார்ந்தவை; அவரின் கூரிய எதிர்காலக் கணிப்புக்குக் கட்டியம் கூறுபவை அவை. அவற்றில், அவர் என்மேல் வைத்த அன்பும் மதிப்பும் நம்பிக்கையும் தெற்றெனப் புலப்படுவதை அன்பர்கள் உணரலாம்.

மதிப்புரையும், அணிந்துரையும் அன்புடன் வழங்கிய அறிஞர்கள் இருவரும், கொய்யாக்கனியின் இரண்டாம் பதிப்பு வெளிவரும் இன்று பொலிவுடம்புடன் இல்லை; புகழுடம்புடன் உள்ளனர். அவர்களின் உள்ளுணர்வு தமிழுடன் கலந்துள்ளது. அவர்கள் புகழ் நீடு வாழ்க என வாழ்த்துகின்றது என் நன்றி நிறை நன்னெஞ்சம்.

'**கொய்யாக்கனி**'யின் முதற்பதிப்பு அட்டைப் படத்தை வரைந்த ஓவியர் அய்க்கண். அதன் மூலப்படம் கிடைக்கவில்லை. இவ்விரண்டாம் படத்தை வரைந்தவர் நம் தென்மொழி அன்பர் திரு. ப. அறவாழி ஆவர். அவர்தம் கைவண்ணத்திற்கு நம் நெஞ்சு நிறைந்த நன்றி.

இவ்விரண்டாம் பதிப்பு அச்சில் வரத் துணை நின்ற என் முதல் மருமகனார் புலவர். திரு. **இறைக் குருவனார்** அவர்களுக்கும், என் இரண்டாம் மகன் **மா. பொழிலன்** அவர்களுக்கும் என் பாராட்டுகளும் நன்றியும் உரிய வாகுக.

'**தென்மொழி**'
சென்னை-5.
தி.பி.உ0கங.
கடகம் உஎ.
(12-8-1982)

அன்பன்
[signature]

# பாவேந்தரின் மதிப்புரை

கள்ளம் எப்படி, அப்படிக்
கடுகளவும் இலாதநெஞ் சினர்;முக்
கனிகள் எப்படி அப்படிப்
போன்றமுத் தமிழின்மே லன்பர்;

குள்ளம் எப்படி, அப்படி
இலாப்பெருங் கொள்கை யுடையார்;
குரைகடல் எப்படி, அப்படிக்
குணநிறை துரைமாணிக் கனார்;

வெள்ளம் எப்படி, அப்படிச்
செந்தமிழ்ச் சொற்பெருக் கேற,
மேன்மை எப்படி, அப்படிப்
பட்டதோர் நடையிற்றம் நல்ல

உள்ளம் எப்படி, அப்படித்
தந்ததோர் உயர்தமிழ் நூல்தான்,
உலகம் எப்படி, அப்படிப்
பட்டதோர் நிலைகொள்கொய் யாக்கனியே!

பாரதிதாசன்.

மொழிநூல் மூதறிஞர்

ஞா. தேவநேயப்பாவாணர் அவர்களின்

# அணிந்துரை

...அஞ்சற் கணக்கரும், என் பழைய மாணவருமான துரை மாணிக்கனார் இயற்றியுள்ள 'கொய்யாக்கனி' என்னும் பனுவலைப் பார்வையிட்டேன். வெண்பாவும், அகலும், ஆசிரிய மண்டிலமும் (விருத்தமும்) இசைப்பாட்டும், ஆகிய நான் மணிகளை விரவிக் கோத்த கோவைபோலும், இப் பனுவலுள் வருஞ்செய்யுட்களெல்லாம், நவின்றோர்க் கினிமையும், கேட்டோர்க் கின்பமும் பயக்குமளவு சொற்சுவை பொருட்சுவை செறிந்து, ஆற்றொழுக்கான ஒழுகிசை நடையில் இயன்று, எல்லார்க்கும் பொருள் விளங்குமாறு முந்திரிப்பதமான செம்பாகமாய் அமைந்துள்ளன. அழகும் ஒளியும் அமைந்து பட்டை தீர்த்த மணிகளூடு அவற்றை இணைத்துச்செல்லும் மாற்றுயர்ந்த பொற்கம்பி போல், இப் பாவினங்களூடு தொடர்ந்து செல்லும் கதையும் சிறந்ததொன்றாய் இரா நின்றது.

கதைச் சிறப்பு.

உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தல்,
உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தல்,
இல்லோன் தலைவனாக உள்ளது புணர்த்தல்,
இல்லோன் தலைவனாக இல்லது புணர்த்தல்.

என்னும் நால்வகைக் கதையுள் எதுவாயினும், மக்கள் வாழ்க்கை பற்றியதாயின், இன்பந்தருதல், உலகொடு பொருந்தல், விழுமியது பயத்தல் என்னும் மூவியல்புகளைச் கொண்டிருத்தல் வேண்டும், அல்லாக்கால் கதை சிறவாது.

மதத்துறையில் மடம்பட்ட பண்டைக் காலத்தில் உலகியற் கொவ்வாத பல தேவியற் கதைக்கூறுகள் ஒரு பயனோக்கிச் சிறந்தனவாகக் கொள்ளப்பட்டன

வேனும், பகுத்தறி வியக்கம் பரவிவரும் இக் காலத் திற்கு அவை எள்ளளவும் ஏற்கா. **கொய்யாக்கனி** என்னும் இப் பனுவல் தழீஇய கதை, இல்லோன் தலைவனாக இல்லது புணர்த்தலே யாயினும், உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தல்போல் உலகியற் பொருத்தம் உடையது; படிப் போர்க்கும், கேட்போர்க்கும் இன்பம் பயப்பது; பல சிறந்த உண்மைகளை எடுத்துக்காட்டி அறவொழுக்கத்தை வற்புறுத்து வது. திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை; அல்லது அகதிக்கு அறமே துணை; கெடுவான் கேடு நினைப்பான்; இருதலைக் காதலே இன்பந்தரும்; 'மெய்வெல்லும், பொய் தோற்கும்' என்பன இப் பனுவற் கதையால் உணர்த்தப்பெறும் உண்மை களாகும்.

ஒரு பனுவலாசிரியனின் மதிநுட்பமும்; அறிவுப் பரப்பும், அவன் செய்யுள் திறமையால் மட்டுமன்றிக் கதையமைப் பாலும் வெளிப்படுவனவாம். இப் பனுவலாசிரியர் செய்யுட் செய்வதிற் போன்றே புதுக்கதைப் புனைவிலும் தேர்ச்சி பெற்றிருப்பது பாராட்டத்தக்கது. குல, மத, கட்சிச் சார் பின்றித் தமிழாக்கம் ஒன்றையே கருதும் சான்றோர், பிற் காலத்துப் பெரும் பாவேந்த ராதற் கேற்ற இவ்விளம் பாவலரைப் பெரிதும் ஊக்கக் கடவர்.

'**கொய்யாக்கனி**" யென்னும் இப் பனுவல் எல்லாத் தமிழர்க்கும் கொய்யுங் கனியாகுக.!

சேலம்
21-9-55



# படையல்

பன்மொழி இலக்கணப் பரவை குளித்தெலா
நன்மொழி எனப்படும் நானில மொழிகளுள்
இன்மொழிப் பரலீ தெனக்கால் நிறுத்திய
தென்றமிழ் வாணர்ஞா. தேவநே யர்க்குப்
படையல் செய்தனன் பணிவொடும்
அடையும் மகிழ்வொடும் அவர்மா ணவனே.

# என்னுரை

"எவ்வழி நல்லவர் ஆடவர்,
அவ்வழி நல்லை, வாழிய நிலனே"

இதைக் கூறியவர் ஒரு தலைசிறந்த பெண்பாற் புலவர். ஆடவர் ஒழுங்கைப் பெண்ணொருவர் கூறுகின்றாரெனில், அவர் கண்டது என்னை ?

நாட்டை உய்விப்பன இரண்டு. ஒன்று ஒழுக்கம்; இரண்டு பொருள். ஒழுங்கும் பொருளும் ஆடவர் மாட்டே! இரண்டின் ஒன்று கெடினும் அதற்கு ஆடவரே பொறுப்பு என்பது அப் புலவர் கருத்து!

ஒழுங்கற்ற நாடு விலங்குவாழ்காடு! பொருளற்ற நாடு தந்தையில்லா வீடு! பொருள் ஒருவாறு ஒழுங்கிற்கும் காரணமாகின்ற தென்பர் அறிஞர். உலகை ஆள்வது பொருளாயின் உள்ளத்தை ஆள்வது ஒழுங்கே! ஒழுங்குள்ள நல்ல உள்ளத்தே தான் உயர்வான எண்ணம் தோன்றும்; அதுதான் நாட்டை ஆளமுடியும். அதற்குப் பொருள் துணை செய்யும்! ஒழுங்குள்ளவனே ஆசிரியனாகவும் முடியும் என்பது பண்டைத் தமிழ்நெறி. உள்ளத்தை ஆளாதவன் உலகத்தை ஆள்வது எங்ஙன்? இதனாலேயே வள்ளுவர் ஒழுக்கம் உயிர் என்கிறார். ஒழுங்கில்லாதவன் நாட்டை ஆள்வது உயிரற்ற பிணம் ஆள்வது போன்றாகும். 'தன் குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் காணுக!' என்று வள்ளுவர் அரசர்க்கு இடித்தும் உரைத்தார். இக் கருத்தை விளக்கின் பெருகும். அப் பெருக்கமே இக் 'கொய்யாக்கனி'

அறிஞர் ஆற்றும் பெருங்கடற் பணியின், ஒரு துளி ஈதென விடுக்கும் என்னை, 'ஆக்குவை பல நூல்' என்று ஊக்குவீர்களாயின் அதுவே என்னை நிறைவு செய்யும்.

இந் நூல் பற்றித் தங்களுடைய மேன்மையான கருத்துரைகளை அருளிய அறிஞர் இருவருக்கும் யான் பெரிதும் கடமைப் பட்டுள்ளேன்.

இந்நூல் வருதற்குப் பேருதவி நல்கிய இன்னுயிர் நண்பர் திரு. நா. அரங்கசாமி அவர்கட்கும், இஃது அச்சேறுங்கால் உடனிருந்து சிறப்பன போற்றி அல்லன களைந்தும், அச்சுப்படிகளை மேவன செய்தும் பேருதவி புரிந்த நண்பர் திரு. ஆ. அழகன் அவர்கட்கும், என் உளமார்ந்த நன்றி.

ஔவை அகம், புதுவை.
1-1-1956.

அன்பன்,
துரை-மா.

# கொய்யாக்கனி

## இயல் : 1

நீண்டொரு தெருவைச் செந்தமி ழோசை
ஆண்டது !

சிரித்தது வானம்; செங்கதிர்க் கையால்
விரித்தது மலர்களை; "விளைந்த அழகு
நிறைத்தது நெஞ்சை; 'நீபார்' என்று
குறித்தவா றிருந்தது புட்களின் இன்னிசை !

ஓங்கிய குன்றின் உச்சியி லிரவில்
தூங்கிய வெண்முகில் அடைகாத் தெழுந்திடும்

புட்கள் எழுவது போல நகர்ந்தது !
நல்லிருட் படையினை நசுக்கிய கதிரை
வண்டுகள் பாடி வழுத்தின. குன்றம்
தேன்கூ டென்னத் திகழ்ந்து நின்றது ! ! 10

குன்றின் விளைச்சலைக் கொண்டவர் பல்லோர்
குன்று சார்ந்த குறிச்சி தன்னில்
வாழ்ந்து வந்தனர் வண்மை யாக !
ஆழ்ந்த கிழங்கினை அகழ்ந்துங் கட்டிய
தேன்கூ டழித்தும் தினைவிளை வாக்கியும்
ஒடிந்த விறகுக ளொன்றுய்க் கட்டியும்
சுமைசுமை யாகச் சுமந்து சென்றே
அமையும் விலையினுக் கவற்றை விற்றலும்
வேண்டிய பொருள்களை வாங்கலும் வழக்கம் !
ஆண்டமைந் திட்ட அமைதி, நகரின் 20
பழிபடு வாழ்வைப் பழித்தது போல
இருந்தது; குன்றடுத் திருந்த வயல்வெளி
பசுமை போர்த்தெழில் பரப்பித் திகழ்ந்தது !

விசும்பு தடவிய வெற்பும் அழகிய
தெரிவையர் தடவிய தோளும் ஊரை
அழகு செய்தன ! அணங்குகள் சிறுவரை
"எழுந்தது ஞாயிறு எழு"கெனச் சிறுவர்
சோம்பல் போக்கிச் சுறுசுறுப் போடு
வேம்புதன் னெடுகரு வேல மரத்தினை
நாடிச் சென்று நறுக்கிய குச்சியை 30
வாயில் வைத்தெழில் வயலினை நாடிப்
போயினர் ! மங்கையர் பொன்போற் குடத்தை
ஏந்திய வாறே எழிலுறப் பேசி
அருவியின் நீரெடுத் தழகிய காட்சியைப்
பருகிய வாறவர் பைய வருதலும்
கண்களிற் பேசுங் காளையர் நோக்கிடப்

பெண்களி லொருசிலர் பேச்சினை வீசலும்
நாடகத் தமிழாய் நடந்தன ! கிழவர்
மாடத்து வைத்த பாதிச் சுருட்டைப்
பற்றிய வாறு பழைய கதைகளைச் 40
சுற்றி வளைத்துச் சொல்லி யிருந்தனர்.

வீட்டுத் திண்ணை மெழுகிய வெய்யில்
வாட்டும் படிக்கவர் வாடிய உடலைக்
காட்டிக் காய்ச்சினர் ! கண்ணீர் வடித்தே
நீட்டி முறுக்கி நெகிழ்ந்த குழவியைத்
தேற்றிய வாருய்த் தேம்பி அழுவதை
மாற்றினர். உழவர் மாடுக ளோடு
திகழ்ந்த காட்சி தெளித்தது அழகை !
புகழ்ந்தொரு பாடல் புலவர் உள்ளத்
தமைவது போல அமைந்ததே அழகு ! 50

நீண்டொரு தெருவைச் செந்தமிழ் ஓசை
ஆண்டது ! கண்கள் அகன்றே ரிளம்பெண்
கருங்குழல் முடித்திளங் கடிமலர் செருகி,
மருங்கெழில் காட்டி மயிலென நடந்து,
பொதிமலர் ஏந்திப் "பூ, பூ" வென்றே
குறிச்சித் தெருக்களிற் கூவியே வந்தாள் !
சிரித்த மலரினைச் சேரும் வண்டுகள்
போல வந்தனர் பூங்கொடி யார்பலர் !
வருவதை நோக்கிய வார்குழல் மகிழ்வொடு
மருக்கொழுந் தெடுத்து மலருடன் கூட்டிக் 60
கேட்போர்க் கீந்தனள் ; கெண்டை விழியினர்
கூட்டு மலர்தனில் நாட்டங் கொண்டனர் !
அணிகள் போர்த்த அணங்குகள் பல்லோர்
தனிமலர் கேட்கத் தந்தனள் உவந்து !

'பூபூ' வென்றே பொன்னிதழ் வாயால்
கூவி யழைத்திடக் குறும்புப் பிள்ளைகள்

'கூகூ' வென்றே குயிலிசை எழுப்பப்
பூவின் இளநகை புரிந்த தவள்வாய் !
"மாலை கட்டுவ துண்டோ" எனவொரு
காளை யவளிடம் கழறினன் ! வெடுக்கெனச் 70
"சேலை கட்டுவ துண்டோ" என்றாள் !
வாலைச் சுருட்டி வாயினைப் பொத்தினன் !
"குலுக்"கென நகைத்தாள் கோதை யொருத்தி!
வெளுத்தது கன்னம் ! விளைந்தது நாணம் !

இடக்கைக் கூடை ஏந்திய படியாய்,
நடக்கைக் காக வலக்கை வீசிக்
கூவிய வாறிடைக் கூடையில் உள்ள
பூவினைக் கொடுத்துப் புன்னகை வாங்கி
வென்று நின்றிடும் வீரன் தோளெனும்
குன்று சார்ந்த குடிலை அடைந்தாள் ! 80

ஓங்கிய குன்றும் ஒடுங்கிய குடிலும்
தாங்கிய செல்வம் தழைத்தோர் போலவும்
ஏங்கிய மனத்தை ஏந்துவர் போலவும்
ஆங்கவள் உளத்தில் அமைந்தன ! குடிலில்
சுருங்கிய கண்ணும், சோர்வுகொள் தோளும்
திரைகொள் உடலும் நரைகொள் தலையும்
விரவிய கிழவர் வெடித்த மலர்களைக்
கட்டிய வாறுளர்; கன்னி அன்பினைக்
கொட்டிய வாறாய்த் 'தாத்தா' என்றாள் ! 90

துள்ளிய மகிழ்வோடு தோகை யிடத்து
'வள்ளீ ! பூக்கள் விலைபோ யினவா ?'
என்றார்; அந்த இளங்கொடிப் பெண்ணோ
மலர்க்கை பிடித்த மலர்க்கூ டையினை
அருகே வைத்தவர் அருகில் அமர்ந்து
"பூக்களைக் கண்டதும் பூவையர் எல்லாம்
ஈக்க ளென்ன இரைந்தனர் தாத்தா !

நறுந்தனிப் பூக்கள் நலமுறக் கட்டிய
முறுவல் செய்திடு முல்லையும் மல்லியும்
'உண்டா' வென்றனர் ஒண்டொடி யோர்சிலர்
'கொண்டுவா' என்றுர் கோதையர் சில்லோர்; 100
தாத்தா! மல்லிகை தனியாய்க் கட்டித்
தா'தா, மாலை நல்விலை போகு'மென்
றஞ்சிறைக் கிளியென அவரிடங் கொஞ்சியும்
பஞ்சுடல் தன்னைப் பைங்கொடி நீவியும்
பொன்கை யால்முகம் ஏந்தியும்
மின்னெனும் படியாய்க் குடில்புகுந் தாளே!



# இயல்: 2

"உருவம் நல் உருவம்; ஆனால்
உள்ளம் நன்கில்லை"

புகுந்தவள் உணவுக் காகப்
புதியன செய்தே இன்பம்
மிகுந்தவ ளாகிக் கொஞ்சும்
மொழியினால் விளித்த வர்க்குத்
தகுந்ததை ஊட்டிப் பின்னைத்
தளருடல் சாய்க்க வைத்து
மிகுந்ததைத் தானும் உண்ட
மகிழ்வினால் நகையைச் செய்தாள்! 1

மெல்லுடல் கிழவர் உண்ட
களைப்பினால் அயரக் கிள்ளை
கொல்லையிற் பூத்த முல்லைக்
கொடியிலும் பந்தல் தாவும்
மல்லிகைக் கொடியி லும்போய்
மலர்ந்திடும் அலர்கள் கிள்ளி
நல்லிடைக் குடத்தை யேந்தி
நீரினைப் பெய்து விட்டாள்! 2

மொக்கினை வாழை நாரில்
தொடுத்தன அவள்பூங் கைகள்!
பக்கலி லெடுத்துப் பாங்கைப்
பார்த்துளம், மகிழ்ந்து, முல்லை
மொக்கினும் சிறந்த தென்று
முறுவல்செய் தவற்றுள் ஒன்றைத்
தக்கதே யென்னத் தேர்ந்து
தனக்கென எடுத்து வைத்தாள்! 3

கோத்திட்ட மலர்ச்ச ரத்தைக்
　　கூடையி லமைய வைத்துப்
போர்த்திஞள் நீரில் தோய்த்துப்
　　பிழிந்தவோர் துணியை! மூலே
சார்த்திய நொய்யல் பாயைத்
　　தரையினில் விரித்துப் போட்டு
வார்த்தபொன் னுடலேச் சாய்த்தாள்!
　　வளர்ந்தது பொழுதும் வானில். 4

பருதிசெய் போரால் மேற்குப்
　　பகுதியில் குருதி ஓட்டம்
பெருகிற்றே! குன்றம் வீரப்
　　பெருமகன் நடுகல் போலத்
தெரிந்ததே! ஊரில் உள்ள
　　தெரிவையர் மகிழு மாறு
விரிந்தன முகைக ளெல்லாம்;
　　விழித்தன கண்ம லர்கள்! 5

துடியிடை வெளியில் வந்தாள்!
　　திண்ணேயில் கிழவர் ஏதோ
மிடியினே எண்ணி வாட்டம்
　　மேலுறல் போலத் தோன்ற
நொடியினே இடையில் காட்டி,
　　"நோதலேன் தாத்தா" என்று
கொடியென அவரைச் சுற்றிக்
　　குறுநகை புரிந்தாள் வள்ளி! 6

உடனவர் நிலேயை மாற்றி
　　ஒண்டொடி குழலேக் கோதிக்
'கடனிலே; வருத்தம் ஓங்கக்
　　காடுமே டில்லே; நாளும்

உடலிளைக் காத வண்ணம்
　　உண்மையில் வருத்தம் என்ன?
திடமிலா வாழ்வு தன்னால்
　　தான்சிறு வருத்த' மென்றார். 7

"இச்சிறு வருத்த மும் உன்
　　எதிரினில் மாய்ந்து போகும்!
அச்சினி லிட்டு வார்த்த
　　அழகொளிச் சிலையே! உன்றன்
சிச்சிலி விழியின் இன்பம்
　　செந்தமிழ் இன்பம்; என்றும்
அச்சிற லென்ப தில்லை
　　அதனால்வாழ் கின்றேன்" என்றார். 8

கன்னங்கள் நாணத் தாலே
　　கனிந்திடத் "தாத்தா, வானம்
பொன்னிறம் பூண்ட தே! நான்
　　புறப்படு கின்றேன்" என்று
மின்னலாய்ப் பறந்து சென்று
　　மலர்க்கூடை யிடையில் வைத்தே
நன்னடை பயின்று செல்லும்
　　பின்னடை கண்டு (உ)வந்தே, 9

"இந்நங்கை யழகைக் காண
　　இவளன்னை இல்லை; தந்தை
இந்நங்கை பிறந்த போதே
　　இறந்தனர்; அக்கா லத்தே
இந்நங்கைக் குற்ற தாயாய்
　　இருந்தவென் மனையாள் கூட
இந்நங்கைக் குதவ வில்லை!
　　இருப்பவன் ஒருவ னேநான். 10

"தந்தைக்குத் தந்தை யாயும்
தாய்க்குநற் றுயே யாயும்
முந்தைநா ளிருந்து காக்க
முனைந்ததில் முடிவுங் கண்டேன்.
விந்தையே ஆகும்! இன்னும்
விழைவதொன் றுண்டு; பெண்ணின்
சிந்தையை மகிழ்வு செய்யும்
நிலையுளான் யாரோ?" என்றார். 11

வள்ளியின் எண்ணந் தாக்க
வழிந்தது கண்ணீர்! 'பெற்ற
பிள்ளைபோ லெண்ணி வந்தேன்
பிரிவெனைக் குறுகி விட்டால்
கிள்ளையோ ஆடிக் காற்றின்
துகள்நிலை யடைவாள்' என்று
துள்ளினர் எண்ணி! நெஞ்சத்
துணுக்கினல் நீர் வடித்தார்! 12

எண்ணத்துத் தளர்வால் இவ்வா
றிருக்கையில் கிழவர் தோள்மேல்
திண்ணெனும் கைகள் வீழத்
திரும்பினர்; மகிழ்வி னலே
"கண்ணையா வா வா" வென்று
கனிவுடன் சொல்லிப் பாயைத்
திண்ணைமே லெடுத்துப் போட்டு
'வந்தமர்' என்ற மர்ந்தார்! 13

"வாட்டமேன், தாத்தா?" என்று
வந்தவன் கூற, "நெஞ்சின்
நாட்டம்வே றென்ன? உன்போல்
நாலுபேர் துணையில் லாமல்

காட்டினில் வாழ்தல் போலென்
    காலத்தைக் கடத்தி விட்டேன்;
வீட்டிலோ கங்குல்! என்றன்
    விட்டிலுக் கொளியொன் றில்லை.' 14

"கொடிக்கொரு கொம்பைத் தேடிக்
    கொணர்ந்திங்கு நட்டால் இந்தக்
தடிக்கிழம் நிறைவி னோடு
    கண்களை மூடும்' என்று
வடித்தகண் ணீரைப் போக்கி,
    "வருவது நீதான்; உன்னை.
முடித்திடும் நினைவும் உண்டு;
    முடிவதெப் படியோ" வென்றார். 15

"வருந்துதல் வேண்டாம்;" என்றான்
    வந்தவன்; 'கருப்பஞ் சாற்றை
அருந்துதல் வேண்டா மென்று
    வெறுப்பார்யார் தாத்தா? கைக்கும்
மருந்தில்லை; மணமாம்!' என்றே
    மேன்மேலும் இயம்பி நின்றான்.
பருந்திற்குப் புறவோ?" என்று
    பதறிற்று கிழவர் நெஞ்சம்! 16

பெண்ணினை யவனுக் கீயப்
    பெரிதான எண்ண மில்லை;
கண்ணையன் தன்னை விஞ்சும்
    காளையைத் தேடி நின்றார்:
அன்னவன் வாராக் காலை
    அவனையே ஏற்கத் தக்க
எண்ணமொன் றிருந்த தாலே
    'இல்லை'யென் றியம்ப வில்லை! 17

வருவதும், மணத்தைப் பற்றி
வாயாடிப் பணத்தைக் கொஞ்சம்
தருவதும், சிறிது கூடத்
தளிர்க்கொடிக் கொப்ப வில்லை.
''உருவம்நல் உருவம் ; ஆனால்
உள்ளம்நன் கில்லை'' என்றே
கருதினள் ; கிழவர் பாலும்
கிளத்தியு முள்ளாள் முன்னே ! 18

'மணத்தினை விரைவில் செய்து
முடித்திட வேண்டுந் தாத்தா ;
பணத்தினை எண்ண வேண்டாம் ;
பாதியூர் என்சொத் தன்றோ !
குணத்தினில் நீங்கள் என்ன
குறைகண்டீர் ? முறையாய் நன்றே
உணர்த்துதல் வேண்டும் அந்த
ஒண்டொடிக்' கென்று சொன்னான். 19

தலையினை யசைத்தார் ஒப்பும்
வகையினில் ! அவனெ ழுந்த
நிலையினில் வருகின் றேனென்
றியம்பியே நடந்தான் ; உள்ளம்
அலையென மோதிக் கொள்ளும் !
அணங்கினைத் காண வெண்ணி
மலையினைக் கண்டார் வானம்
மசிந்தது மேகஞ் சூழ்ந்து. 20



# இயல் : 3

நீரிடை விழுந்த தொன்று
நிலத்திடைக் குதிக்க வெண்ணி !

சூழ்ந்துள துயரெல் லாம்போய்ச்
சுடர்க்கொடி தன்மேல் நெஞ்சம்
ஆழ்ந்தது கிழவர்க் கந்த
ஆயிழை திரும்ப நேரம்
தாழ்ந்ததும் ஏனென் றெண்ணித்
தவிக்கையில் துளிநீர் வந்து
வீழ்ந்ததே அவர்மேல் ! வானம்
வெருவுமா றிடித்து மின்னி. 1

விரைந்தது வாடைக் காற்று.
விரைவினில் கரிய மேகம்
நிறைந்தது. கிழவர் வீட்டுள்
'நெடுக்'கெனப் புகுந்து கொண்டார் !
மறைந்தது பருதி ; எங்கும்
மஞ்செனத் தூறிப் பின்னை
அறைந்தது போல வீசி
அடித்தது மழையும் காற்றும் ! 2

குன்றினைச் சாய்த்தல் போல
வீசிற்று வலிந்த காற்றே !
ஒன்றினோ டொன்று மோதி
ஒடிந்தன கிளைகள் ! "விற்கச்
சென்றவள் இன்னும் காணேன்
செய்குவ தறியே" னென்று
நின்றிளங் குழந்தை போலும்
நினைத்தவ ரழுதார் மீண்டும்! 3

வறியவர் கண்ணீர் போலப்
பெய்ததே! அதனைப் போக்கும்
அறிஞரின் திறத்தைப் போல
அடித்தது காற்றே! ஒன்றாய்
நிறுவிய திருத்தம் போல
நிலத்தினை நிறுவும் நீர்! வீணை
கறுவுத லாலே புல்லர்
கதறலை இடியாங் கொக்கும்! 4

காட்டிலே வளர்ந்து நீண்ட
கடிமரக் கிளையிற் றங்கும்
கூட்டிலே பறவைக் குஞ்சு
குளிரினால் விறைக்கும்; நீண்ட
கோட்டினை இறுகக் கட்டிக்
கொண்டுள குரங்குக் கூட்டம்
கேட்டிடும் இடிகட் கஞ்சிக்
கிளைவிட்டு நழுவி வீழும்! 5

கூடுகள் நனைந்து வீழக்
குஞ்சினை நீர்கொண் டேகப்
பேடுகள் தொடரும்; அந்தப்
பிரிவினாற் சேவற் புட்கள்
தேடுவ தேழை மக்கள்
தங்கியோர் இடத்தில் வாழ
வீடுக ளின்றி வெட்ட
வெளிகளி லலைவ தொக்கும்! 6

மெல்லிய கைகள் தம்மால்
மேனியைப் போர்த்தி யும்மோர்
மெல்லிய வேட்டி யால்தன்
தலையினைக் காத்தும் நின்றார்!

'சில்'லெனும் குளிரின் வீச்சால்
சிலிர்த்ததே உடல்;அக் காலை
மல்லிகைப் பந்தல் தன்னைப்
பிய்த்ததோர் வலிந்த காற்று! 7

பேரிடி யொன்றும் மின்னல்
பெரியதா யொன்றும் வீசத்
தேரிடைத் தொங்கும் ஓரப்
பெருமணி யசைவ தேபோல்
நாரெனக் கட்டிக் கொண்ட
குரங்கெலா மசையும் அஞ்சி!
நீரிடை விழுந்த தொன்று
நிலத்திடைக் குதிக்க வெண்ணி! 8

"மழையினிற் சிக்கி னாளோ?
மடுவினில் தவறி வீழ்ந்து
புழையினி லொதுங்கி னாளோ?
புயலினால் மயல்கொண் டாளோ?
உழைதனா லுயிர்போ யிற்றோ?
உலுத்தர்கைக் குள்ளா னாளோ?
பழையன மாய்தல் போன்றிப்
பாவையும் மாய்ந்தாளோ" வென்(று) 9

அலறினார்; துடித்தார்; வீட்டுள்
அங்குமிங் காய லைந்தார்:
நிலைகொள வில்லை; காற்றும்
நிற்பதா யில்லை; அக்கால்
வலிந்தவோ ரோசை கேட்டு
வந்தனர் வெளியே! காய்கள்
மலிந்தமா மரத்துக் கோடு
கிடந்ததைத் தொலைவிற் கண்டார்! 10

"பெருங்கிளை விழுந்த தாலென்
பைங்கிளி மாய்ந்த தோ?மென்
மருங்கொடிந் திறந்ததோ ? நான்
அறிகிலேன் ஐயோ" வென்றே
இருங்குடில் கூரைத் தண்ணீர்
இறங்குதல் போல நீரைச்
சுருங்கிய கண்கள் கொட்டக்
கதறினர் இருளில் நின்று ! 11

பாம்புகள் புற்றுக் குட்போய்ப்
பதுங்கின ; காக்கைக் கூட்டம்
வேம்பினை யண்டிற் றங்கே
வெளியிலோர் குஞ்சு மில்லை;
காம்புக ளொடிந்து வீழ்ந்த
கடிமலர்க் கூட்டம்; எண்ணித்
தேம்பினர் கிழவர் செய்வ
தறியாது வருந்தி னரே! 12

மல்லிகைப் பந்தல் சாய்ந்த
வருத்தமும், கண்கள் ஒத்த
மெல்லிடை வெளியிற் சென்று
மீளாத துயரும், சேர்ந்து
கல்லிய துள்ளந் தன்னை;
கன்னிவந் தடையா முன்னர்
வல்லிருள் வந்து போர்த்த
வகையினல் கிழவர் நொந்தார் ! 13



# இயல்: 4

'ஓ'வெனக் கதறி ஞளவ் ஒண்டொடி கிழவரும்-அம்
மாவெனக் கதறி அந்த மானினைத் தழுவிக் கொண்டார்!

பெருமழை சிறிதா யிற்று;
பேரிடி குமுற லாக
அருகிற்று; காற்றும் கொஞ்சம்
அடங்கிற்றே; இருந்தும் மைபோல்
இருளிருந் ததனல் சேய்மை
இருக்கின்ற பொருள்கள் தம்மின்
உருவங்கள் தெளிவில் லாத
உள்ளம்போ லிருக்கக் கண்டார். 1

'மேம்படு சினத்தி னலே
மற்றவர்க் கின்னல் செய்தே
தாம்படும் அமைதி போலத்
தரணிக்கு மழையை யீந்து
வான்படும் அமைதி யென்ன
வறுமையும் துயரும் நீங்கித்
தாம்படும் அமைதி எந்நாள்'
என்றனர் கிழவர் கண்டு! 2

வீட்டினுள் ஒளியைக் கூட்ட
விளக்கினைத் தேடிக் கண்டு
சூட்டடுப் பண்டை வைத்த
தீப்பெட்டி நனைந்த தாலே
வாட்டமுற் றதனின் மேலாய்
வள்ளியின் எண்ணம் வாட்ட
நீட்டினர் நடையை! முன்றில்
நின்றிருந் தாளக் கோதை! 3

வேட்டுவக் கூட் ட மொன்றில்
வழியிழந் தொருவன் சென்று
மாட்டிய தாலன் னை
மாற்றுனென் றெண்ணித் தீயில்
வாட்டிடப் போகுங் காலை
'விடுவிப்பீர்' என்று வந்த
கூட்டத்துத் தலைவன் கூறக்
கொண்டிடும் மகிழ்வைக் கொண்டார்! 4

கிள்ளையின் உடலோ நீரில்
தோய்ந்தது; கண்கள் நீரைத்
தள்ளின; நெஞ்சு விம்மித்
தணிந்தது; வானில் வந்த
வெள்ளிய நிலவு கொஞ்சம்
வீசிய தவள்பே சாமுன்
"வள்ளி! எங் கம்மா சென்றாய்?
வா! உள்ளே" என்று சொன்னார்! 5

"ஓ"வெனக் கதறி னாளவ்
வொண்டொடி; கிழவ ரும்"அம்
மா"வெனக் கதறி அந்த
மானினைத் தழுவிக் கொண்டார்!
"ஓ"வென மரங்கள் செய்யும்
ஒலியினோ டிவர்கள் ஓலம்
தோய்ந்ததவ் விருளி னூடே!
தொலைசெலும் துன்ப வாதை! 6

அடிக்கின்ற காற்று! வானின்
அழகொளி நிலவு வள்ளி
வெடிக்கின்ற நெஞ்சு! சுற்றி
விரிந்துசெல் அவலம்! கேட்டுத்

துடிக்கின்ற கிழவர் உள்ளம் !
　　துடிப்பினுல் அவர்தங் கண்கள்
வடிக்கின்ற கண்ணீர் ! துன்பச்
　　சூழலில் தோய்ந்த காட்சி ! 7

காற்றுவந் தெடுத்த ஓலை
　　குந்திய வழியில் வானத்
தேற்றிய விளக்குப் போல
　　நிலவொளி குடிலுக் குள்ளே
தேற்றுத லில்லா தார்க்குத்
　　துணைபோலு மாகிச் செல்வ
வேற்றுமை யில்லா னென்று
　　விளக்கிற்று விளக்கு மாகி ! 8

நங்கையின் கண்களோ கண்
　　நீராலே தோயும்; நெஞ்சு
பொங்கியே குவியும்; வாயோ
　　பொறுக்காது கதறும்; சென்று
தங்கையால் அவளைச் சேர்த்துத்
　　தேற்றினுர் கிழவர்; அந்தக்
கங்குலி லீரு யிர்கள்
　　கதறின அடங்க லின்றி ! 9

"என்னம்மா வள்ளி ?" யென்றும்
　　"ஏனழுகின்ருய்" யென்றும்
"பொன்னம்மா கூறு" யென்றும்
　　பொழிந்தகண் ணீரைப் போக்கி
"அன்னையோ இல்லை, உன்னை
　　ஆற்றிட; மற்றும் பெற்ற-
கண்ணைப்போ லெண்ணுந் தந்தை
　　கண்ணீரைத் துடைக்க வாரார் ! 10

"ஊட்டிய சோறு மிஞ்ச
உண்பதால் மகிழும் உன்றன்
பாட்டியு மில்லை கண்ணே!
பாட்டன்தான் உள்ளேன்; நெஞ்சை
வாட்டியே விட்டாய்; அந்த
வாட்டந்தான் என்னே அம்மா,
கேட்டுநான் தேற்ற" வென்று
கிழவரப் பேடைக் கேட்டார் 11

தன்பெரு வாட்டத் தால்தான்
தளர்கிழம் வாடி மேலோங்
கன்பினு லழுகின் றுரென்(று)
அணங்குணர்ந் தவரைத் தேற்ற
என்புடல் தன்னை நீவி
இருகண்கள் வடித்த நீரைத்
தன்மலர்க் கையால் நீக்கி
நடந்ததை யெடுத்துச் சொல்வாள்! 12

"மலர்விற்றுத் திரும்புங் காலே
மழைவர, ஊரைத் தொட்ட
பலர்செல்லும் பாதை தாண்டிப்
பன்மரக் கூட்டத் தின்பால்
சிலநொடி நின்று முன்னுல்
சிறுவீடு கண்டேன்; யாரும்
இலரென வெண்ணிச் சென்று
மழையினுக் கொதுங்கி னேனே! 13

[வேறு]

வீட்டிலே யாரிருப்பார் என்று காண
வெளித்திண்ணை மேலேறிக் கண்டு விட்டேன்!
ஓட்டமெடுத் தேனெருவன் வெளியே வந்தான்!
'ஓடாதே நில்' லென்று பிடித்தான் தாத்தா!

வேட்டு வன்கைச் சிக்கிவிட்ட குருவி போல
வெலவெலத்துப் போய் விட்டேன்; பெருத்தகாளை
மாட்டுக்குக் கொம்பென்ன முகத்தில் மீசை!
கரியநிறம் பெருந்தொந்தி கொண்டிருந்தான்! 14

வள்ளியிதைச் சொன்னவுடன் உடல்வெ யர்த்து
வாய்விட்டு "ஓ" வென்றே யலறத் 'தாத்தா'
துள்ளியிடி யுண்டாற்போல் 'அம்மா அம்மா'
தோன்றியவன் பெருங்குடியன்; பெண்கள் கொள்ளும்
கள்ளனவன்; பெரும்பணத்தால் குறிச்சி ஊரின்
கன்னிகளின் கற்பையெல்லாம் குடித்தோன்! அம்மா
கொள்ளிதனை என்நெஞ்சில் வைத்தாற் போலக்
கூறிவிட்டாய்! என்செய்தான் உன்னை? என்றார். 15

கிழவரதைச் சொன்னவுடன் நடுங்கிப் போனாள்!
கிளியொன்றைப் பெரும்பூனை கவ்வி னாற்போல்
விழுதாடும் ஆலிடையில் எழுந்த கூச்சல்
விழுந்ததவர் காதில்! இளங் கோதை மீண்டும்
அழுதபடி பலவுரைத்தாள் இருவர் நெஞ்சும்
ஆழியிடைப் பட்டதொரு கலம்போ லாகும்!
வழுவில்லா வாழ்க்கைக்குப் பிறப்பும் வேண்டும்!
வாழ்கின்ற செல்வரது துணையும் வேண்டும்! 16



# இயல் : 5

*வேல்விழி நிமிர்ந்தாள்; வேட்கையோ டொருவன்*
*சேல்விழி பருகிச் சிற்றிடை அசைவின்*
*மேல்விழி வைத்த வா றிருந் தானே!*

*வேண்டுவ தெல்லாம் விளக்கிய பின்னர்*
*நீண்டோ ரமைதி பூண்டது குடிலே!*
*இரவின் அமைதியில் இவர்களின் அமைதி*
*விரவி யிருப்பினும் வெதிர்ப்புறு நெஞ்சிற்*
*புயல்வீ சிற்றப் பொற்றெடி நங்கை*
*கயல்விழி யுகுத்தது கண்ணீர்; அக்கிளி*
*பூனையின் கையினிற் பட்டதும், மானென்*
*றூனையின் கண்முன் பட்டது மொன்றே!*

*வஞ்சிக் கொடியின் 'வாய்மொழி' யொன்றே*
*விஞ்சிய தவனின் வெறிகொள் நெஞ்சை!* 10
*பிறகெனும் பேச்சால் புறவினை விட்டான்!*
*"சிறகினைத் தீண்டிய சில்லரைச் செய்தியை*
*மறந்திடு" கென்றும் 'மலர்க்கென மங்கை*
*வெளிப்போய் வருவது வேண்டுவ தில்லை;*
*புலியாற் படுவது பொல்லாத் தீங்கே'*
*என்றுங் கூறி ஏந்திழை வெளியிற்*
*செல்வதை நிறுத்தினர்; சின்னாள் கழிந்தன!*

*கண்ணையன் வருவதும், கிழவர் தம்பால்*
*பெண்ணைப் பற்றிப் பேசலும், மணத்தை*
*விரைவினில் முடித்திட வேண்டலும், வேற்கணாள்* 20
*மறைவிருந் தேசெவி மடுப்பதும் கிழவர்*
*அறிவார்; ஆயினும் அவளிட மொன்றும்*
*தெரிவி யாமலே இருந்துவந் தாரே!*

கன்னியை னைப்போய்க் கடிமணம் செய்ய
ஒப்பிட வில்லையவ் ஒண்டொடி! வாழ்வில்
ஒருவகைக் கசப்பவள் உணர்வைக் கெடுத்தது!
பெரியவர் இதையும் தெரிந்தா ராயினும்
'சரிப்பட் டுப்போம் சடுதியி லவட்கே'
என்னும் எண்ணம் அவரை வளர்த்தது!

கன்னல் மொழியாள் காலையி லெழுவதும் 30
மல்லிகைக் கொடியினை மருவறப் பார்ப்பதும்
முல்லைக் கொடிவைத் துவப்பதும், குடிலுக்கு
அண்மை உள்ளவர்க் கவைதமை விற்பதும்
விற்ற பொருட்கு வேண்டுவ வாங்கலும்
உள்ள தினையிட் டுரலில் இடிப்பதும்
கொல்லையில் விளையும் கொழுவிய கீரைத்
தொகையல் செய்து தருவதும் பேசும்
வகையா லவரின் வாட்டம் போக்கலும்

அவரும்,
உலகின் தரத்தினை உணர்த்திடும் வகையில் 40
பலபல கதைகளைப் பாவைக் கியம்பி
உணர வைப்பதும், ஒண்டொடி மகிழ்தலும்
நாளும் நடந்து வருகையில்; ஒருநாள்
கட்டித் தந்த பூக்களைக் கூடையில்
கொட்டித் தந்து, "கொண்டுபோய் இதனைக்'
கணக்கப் பிள்ளையின் கடைசி மருமகள்
பிணக்கா ளுள்ளனப் பிள்ளையின் மகன்வந்
தும்மிடம் சொன்னதாய் உரைத்தீ ரே, இம்
மல்லியும் முல்லையும் பார்ப்பா ளாயின்
பல்லும் வாயும் பவளமும் முத்தும் 50
எனும்படி யாகும்! இனிமேல் அவர்க்கும்
மனம்படி வாகும்; பணம்படி கிடைக்கும்;
இன்றவள் கண்டால், இருபொழு தினிலும்
என்றும் ஒருபடி எடுத்துவா என்பாள்.

கொண்டுபோய்க் கொடுங்க'' ளென்றக் கோதை
தண்டுகைக் கொடுத்துத் தடம்பார்த் தனுப்பி
வண்டெனப் பறந்தே வன்குடம் தூக்கி
'வாடா முல்லை வாடிடும்' என்றும்
'தேடா மல்லிகை தேடிடும்' என்றும்
நீரினைப் பெய்கையில் நீள்கொடி யொன்று 60
காற்றி லசைந்திட ஆற்ற தவளாய்க்
கோலினைத் தேடிக் கொணர்ந்ததை நட்டு
வேல்விழி நிமிர்ந்தாள்; வேட்கையோ டொருவன்
சேல்விழி பருகிச் சிற்றிடை அசைவின்
மேல்விழி வைத்த வாறிருந் தானே!

விழிதடு மாற, விதிர்ப்புற வெழுந்த
வழிதடு மாற, வனிதையை நிறுத்தும்
இடைதடு மாற, எழுந்தவள் நடக்கும்
நடைதடு மாற, நாணம் கவ்விட
மலர்விழி கவிந்து, தளர்நடை யிட்டுச் 70
சிலநொடி தாழ்த்திச் சிரிக்கும் வாயினை
அடக்கல் போலுளம் அடக்கித் தடுத்திட
நடப்பன வென்ன யார்முன், எங்கெனும்
நிலையுண ராதோர் கலைபயில் நங்கை
சிலையென நின்றிடச் செருத்தோள் மழவன்
'கொழுங்கொம் பொன்று கொணர்ந்து நட்டனை,
கொழுங்கொடிச் சுருட்கை சுற்ற தொழிந்தனை!
நிலைதடு மாறும் நெஞ்சேன்'? என்றன்.
நிலைதடு மாறும் நெஞ்சொடு வஞ்சி
தன்னிலை உணர்ந்து தனித்தவன் ஒருவன் 80
முன்னிலை குலைந்த முறையினை யுணர்ந்து
கொடித்தடம் நோக்கிக் கிழவர் தங்கைத்
தடிக்கம் பூன்றிய தளர்நடை கண்டு
கடந்தொரு காட்சி நெஞ்சினை விட்டுக்
கடவா முன்னிலை கடந்தாள் என்னும்

பழிச்சொல் ஏற்றிடப் பாவை யஞ்சி
"ஆங்கு வருவதென் அன்னையின் தந்தை;
நீங்குக இவ்விடம் நீர்" என மொழிந்தே
ஓங்கு நிலைப்புனல் தாழ்விடம் நோக்கி
விரைவது போலாய் விரைந்தாள்; அவனும் 90
'சிறைப்பட் டாளொரு சிற்றிடை' யென்று
நெஞ்சினைக் கொடுத்தவள் நெஞ்சினை வாங்கிப்
பஞ்சுடற் கிழவர் பார்த்திடு முன்னர்ப்
பறந்தான்; காதல் நெஞ்சைத்
திறந்தான் என்றத் தெரிவைநினைத் தாளே!



# இயல் : 6

தடந்தோளைக் குன்றாய்த் தளிர்நெஞ்சை வாளாய்
அடலேறாய்க் கொள்ளு முரு.

நினைத்தாள் ஒருமுறையே! அவ்வளவில் நாணம்
அணைத்ததப் பைங்கிளியை அண்டிப்—பணைத்தோள்
மறக்கும் படிமுயன்றாள் மற்றாங்கே மங்கை
இறக்குநிலை யுற்றாள் இடிந்து. 1

நோய்செய்யும் நெஞ்சோடும் நுண்மருங்குல் தன்னோடும்
பாயிற் படுத்தாளப் பைங்கொடியாள்-நோய்செய்தோன்
வஞ்சி யெனக்கேற்ப வாய்த்தவள் நீயென்று
நெஞ்சிற் படுத்தான் நெடிது! 2

மூடுவது போற்கண்கள் மூடும்; அவன்வந்து
தேடுவது போலத் தெரிவை நினைத்தெழுந்தே
ஓடிக் கனவென் றுணர்ந்தபின் நெஞ்சுமிக
வாடிப் படுத்திடுவாள் வந்து. 3

துடித்தெழுவாள் இன்கனவால் தோகை! கிழவர்
கடித்ததெதோ வென்று கழற—விடிந்ததென
எண்ணி யெழுந்தேனென் பாளே! கனவிலணை
கண்ணிப் புனைமார்பன் கண்டு! 4

உள்ளத் தவனுருவம் உள்ளி யிணைகாணு
தெள்ளி மடநெஞ்சை ஏசுவாள்—விள்ளித்
தடந்தோளைக் குன்றாய்த் தளிர்நெஞ்சை வாளாய்
அடலேறாய்க் கொள்ளு முரு! 5

'விழிகண்டேன்' என்பாளே! வெல்லுவகை யின்றி
மொழிகண்டேன் அன்புள்ளம் பேண—வழிகண்டேன்
விண்டு வழிந்தோடுங் காலும் பொறுக்குநிலை
கண்டுவந்தேன் என்பாள் கனிந்து! 6

கண்ணுறுத்தும்; காணுத காதற் கணைவந்து
புண்ணுறுத்தும் போலமிகத் துன்புறுத்தும்—விண்ணின்
இடிதாங்கு தோளுறுத்தும் என்றியம்பி ஏகும்
மிடிசெய்வான் கண்ட நொடி! 7

பூக்குமோ அவ்வுளத்துங் காதல் எனநினைத்துப்
'பூக்கும்பூக் கும்மெனவே' நாக்குளறத்—'தூக்கத்தில்
சொல்லி மகிழ்வதெதோ' வென்ருர் கிழவர்; அது
மல்லிக் கொடியென்பாள் மாது! 8

"பார்த்த தொருபார்வை பாழிரவு வந்ததற்குள்
போர்த்த தினிநாளைப் பார்ப்பானே-ஈர்த்தென்னை
வாட்டுவான் போலவனும் வாடுவனே' என்றிடுவாள்
பூட்டுவான் உள்ளத்தே போல். 9

நோக்கொன்றே நீண்ட நொடிசெய்யின் நோக்கியவன்
பூக்கொன்றை மார்பென் நொடிசெய்யும் – மாக்குன்றத்
தோளுடையான் நீக்கந் தொடங்களவின் துன்புறுத்தின்
நாளகூடவின் மாய்த்திடுமென் பாள்! 10

இந்நாள் இராதவ் விடரென்ன? இவ்விரவு
முன்னுள்போ லேகா முறையென்ன? —வெண்ணிலவும்
சுட்டெரிக்க என்பிழைத்தேன்? என்றழுதாள் வந்து
விட்டெறிந்த கண்பட்ட வேய்! [சென்ருன் 11

தாக்குகின்ற எண்ணங்கள் தாளா திருந்தவளைத்
தூக்கம் அணைத்ததுவே தோயிருளைப்—போக்கியொளி
தந்தான் பரிதியவள் செந்தா மரைவிழிகள்
நொந்தாள் கனவழிந்த தென்று! 12

—o—

# இயல் : 7

*கிளி, சிற கடித்துக் கிளத்துது காதல்*

என்றுங் காணு திடரவள் நெஞ்சில்
நின்றிட வேறென் நினைவும் குன்றி
ஒன்றை எண்ணியு மொன்றினைச் செய்தும்,
நன்றென எதையும் முடித்திரா ளாகிக்
'கம்பெடு' வென்றே கிழவர் கழறிடச்
செம்பெடுத் தீதலும், செருப்பென நெருப்பைக்
கொணர்தலும் 'குலுக்கென'க் குறுநகை சிந்தலும்
உணர்ந்தார் கிழவர்!

ஒண்டொடி யுள்ளம்
முன்னாள் கண்ட முகத்தின் குறிப்பிலும்
திண்டோள் தன்னிலும் திளைத்தது; மேகம் 10
பெருமழை பொழிவது போலக் காட்டிச்
சிறிதாய்த் தூறிச் சிதைவது போன்றே
கண்ணுற் பேசிக் கடிதின் மறைந்தவன்
எண்ணம் மேலிட, ஏக்கந் தாக்கிடக்
'கொல்லையில் மணந்திடும் முல்லை யரும்பைக்
கொய்திட வென்றும்' 'குடத்து நீரினைப்
பெய்திட' வென்றும் புறக்கடை சென்று,
கண்விழி யோட்டிக் கள்வனைத் தேடிப்
புண்விழி யாகிப் புலத்தலும் ஆகப்
பொழுது கடத்திடப் பூக்களைக் கிழவர் 20
பழுதறக் கட்டிப் பாவையை அழைத்து,
"வள்ளி நான்போய் வருவதற் குள்ளாய்ச்
சுள்ளியைப் பொறுக்கிச் சுறுக்காய்ப் பணிகளைச்
செய்து முடித்தென் நொய்யல் வேட்டியைத்
தைத்துப் பிழிந்து வெயிலிற் போடு;
விற்ற காசில் வேண்டுவ எல்லாம்

வாங்கி விரைவொடு வருவேன் உனக்கு
வேண்டுவ தென்ன? விளம்புக' வென்றார்.
'எஞ்சிய காசில் இனிது முதிர்ந்த
தேறல் வாங்கித் திரும்புவீ ராயின் 30
நாச்சுவை போக்கிட மாப்பிசைந் தீவேன்!
வெறிமிகக் கொண்டு விரும்புவீர் நீரென,
அறிகுவன்' என்றாள் ஆய்தொடி யரிவை!
கிழவர் நகைத்தே, கீழ்த்திசை வெளுக்குமுன்
உழவர் கழனிக் கோடல் போல
விரைந்தார்!

அந்த வேற்கண் அவர்போய்
மறைந்த பின்னை மலர்முகத் தோடு
வாயில் பெருக்கிப் பாயல் விரித்துக்
கட்டிய தினையைக் கொட்டிப் பரப்பிக்
கண்ணிடை யொன்றுங் கருத்திடை யொன்றும் 40
ஏந்திய வாறாய், ஏந்திழை வாய்க்குள்
"கிளி,சிற கடித்துக் கிளத்துது காதல்!
அளியிசை யெழுப்பி உணர்த்துது காதல்!
மலர்மண மெழுப்பி விழையுது காதல்!
தளர்மன மேனோ தார்புனை மார்ப!"
என்றே,
பாடியும் நிறுத்தியும் பாட்டின் பொருளை
நாடிச் சிரித்தும் நன்னுதல் மீண்டும்,
'வாடிய உள்ளத் தோடுழல் கின்றேன்
வந்திடு! வந்தெனை வரித்திடு வாயே! 50
தேடுமென் கண்கள் துவண்டிடு முன்னர்
நாடுவை என்னை நாடுவை யே'வெனப்
பாடித் திரும்பினள்; பல்லினைக் காட்டிக்
கண்ணையன் நின்றே கவிதையைச் சுவைத்த
காட்சியைக் கண்டாள்; கடிதின் நாணி
மீட்சியில் லாளாய் முனிவொடு நோக்கித்

"தாத்தா இங்கில்லை! தனித்துளேன் அவரைப்
பார்த்திட வேண்டின் பிறகு வரு"கெனக்
கூறிய வாறே குடிலுட் புகுந்தாள்!

இசைந்த பாடல்தன் எழிற்பொரு ளொட்டி 60
இசைத்தான் பின்வரும் இசையினை நின்று!
"கிளத்திய காதற் கிளியினைச் சேவல்
விளித்தது வருகென விளித்திடக் காதல்!
உணர்த்திய இசையினை உணர்ந்தோர் இன்னிசைப்
பிணைவண் டழைக்குது பேசிடக் காதல்!"
என்று மாற்றிய இசையினைப் பாடி,
வென்றவன் போலாய் வெடித்த சிரிப்பவன்
வாயினைப் பிளந்து வந்தவள் நெஞ்சில்
பாய்ந்தது! மேலும் பாவை தன்னிடம்
"கிழவரிங் கில்லாக் காலுனைக் காண 70
விழைந்தேன் பலநாள்; வெறிசெய் கண்ணி!
எனைநீ மணந்திட இசைகுவை யாயின்
இணையே தின்றி எழிலொடு வாழ்வோம்!
எண்ணம் என்ன இயம்புக" வென்றான்.

"வினவிய கேள்வியின் விடைகாண் டற்கு
நினைவெனக் கில்லை; நீர்மணம் பற்றிய
செய்தி யாவையும் சென்றவர் மீண்டதும்
எய்திக் கேட்க! இவ்விடம் விட்டு
நீங்குக இந்நொடி! இன்றேல் நீவிர்
தீங்கினை யடைவீர்!" என்றனள்! "தீங்கே 80
அடையினும் முடிவில் அணைந்திடப் போவது
சேயிழை யொருத்தி" என்றான்; அவளோ
"தனித்துள இளம்பெண் தன்னிடம் மிகையாய்
வாயா டுதல்பெரும் வழுவாம்; உடனே
செல்லுக" வென்று சிறுகுட மேந்தி
எரித்திடு பார்வை எடுத்து வீசி

விரித்தாள் நடையை! கண்ணையன் கைகளை
முறுக்கிய வாறு முணுகிக் கொண்டே
செருக்கொடு சென்றான்; சேயிழை பின்னர்
புனலொடு திரும்பிய பொழுது 90
கனிவொடு நின்றான் கருத்தனில் நின்றோன்!



# இயல் : 8

தொத்தவரும் கிளிதன்னைப் 'போ! போ!' வென்று
தொங்குகின்ற பழக்குலைதான் கூற லுண்டோ?

நின்றவனைக் கண்டவுடன் தமிழின் பத்தை
நினைத்தவுடன் மகிழ்வுகொளும் புலவர் போல
நின்றதவள் நெஞ்செனினும் நிலைகாட் டாது
"நின்றிருப்ப தார்" என்றாள்; நெடிது நிற்குங்
குன்றனைய தோளுடையான், குழப்பத் தோடும்
குளறுகின்ற பேச்சோடும் கோதை பாலாய்
'அன்றெனது நெஞ்சுதனை விட்டுச் சென்றேன்
அதைவாங்கிப் போகவந்தேன்' என்று சொன்னான்

குடமேந்தி நின்றவளின் குவளைக் கண்ணும்
கொடும்புயலை வீசியவன் கண்ணும் காதல்
நடமேந்தி மயலேந்தி நிற்கப் பாவை
நாணுற்றுப் புன்னகைத்துப் பார்வை வாங்கித்
திடமேந்தும் உளத்தோடு துள்ளிச் சென்று
திரும்பிவந்தாள்; நீர்க்குடத்தைக் குடிலுள் வைத்தே!
படமேந்திப் பார்வையிட்டு மகிழ்வு கொள்ளும்
பயில்கலைஞன் போன்றவனை நெருங்கி நின்றே, 2

"என்நெஞ்சை எடுத்துமது நெஞ்சில் வைத்தீர்!
எடுத்துமது நெஞ்சையென் நெஞ்சில் வைத்தீர்!
என்நெஞ்சின் நினைவும் அதன் அமைதி தானும்
எனக்கில்லை இப்பொழுது; நீங்கள் வைத்த
வன்னெஞ்சோ உங்களையே நாடி நின்றென்
வாய்மொழிக்குச் செவிசாய்க்கா தென்னை நாளும்
துன்புறுத்தும்; தொல்லையேன்; எனது நெஞ்சைத்
தந்திடுவீர் உம்நெஞ்சைத் தருவேன்" என்றாள்! 3

அடிவானத் தெழிலைஅதன் பரிதி தன்னை
அழகென்று பெயர்வைத்துச் சுவைத்தற் கேயோர்
முடிவில்லா மோனத்தி லாழ்ந்து நிற்கும்
முத்தமிழில் வல்லான்போல் அவளின் பேச்சில்
படிவான தவன்நெஞ்சம்! பாவை நெஞ்சும்
பறந்ததுவே! விண்ணில்! முகம் மதிபோ லானாள்.
விடிவான வெள்ளியைப்போல் பற்கள் காட்டி.
விளிம்பிதழில் குறுகுறுப்பைக் காட்டிச் சொல்வாள்!

"கண்வைத்தீர் கருத்தள்ளி நெஞ்சில் வைத்தீர்!
'காதலென்னும்' பெயர்தன்னைச் சொல்ல வைத்தீர்!
பெண்வைத்த நாணமதை விடுக்க வைத்தீர்!
பேசாத என்னைவந்து பேச வைத்தீர்!
விண்வைத்த நெஞ்சினையும், வெற்பு வைத்த
வேல்தாங்குந் தோளினையும் எண்ண வைத்தீர்!
புண்வைத்த வாள்போல மேலும் மேலும்
பொருதோளை முன்வைத்துத் துடிக்க வைத்தீர்!" 5

என்றியம்ப எட்டிநின்றோன் கிட்டி வந்தே
ஏந்திழையின் கைதொட்டான்; துணுக்குற் றுளாய்க்
கன்றெனவே துள்ளியவா றழகு பூக்கும்
கொல்லையினை யடைந்தவளைத் தொடர்ந்து சென்
சென்றவளைப் பிடித்திழுத்து நிறுத்திற் றேயோர் [றான்!
செழுங்கொம்பு! சிரித்து விட்டாள், சினந்து கொண்
குன்றனைய தோளனைதை எடுத்து விட்டான்! [டாள்!
குமிழ்ச்சிரிப்பைப் 'பரிசென்றே' யவனுக் கீந்தாள்! 6

"கிள்ளைமொழி! உன்பெயரைக் கிளத்தி டென்"றே
குழல்நீவி நுதல்நீவிக் கேட்க 'கோதை'
'வள்ளி'யெனக் கூறியவன் தோளை நீவி,
"வந்தென்னைக் கண்டெனது கருத்தை யெல்லாம்

அள்ளியெனை ஆதரிக்கும் திருவா ளர்தம்
அழகுபெயர் என்ன''வெனத் ''துள்ளியோடும்
புள்ளிமான் நீஉன்னைக் காக்கப் போகும்,
பெருஞ்'சிங்கன்' நானென் றான்; நகைத்து நின்றாள்.

'சிங்க'னெனும் பெயரைத்தன் வாயால் மெல்லச்
சொல்லியவள் நெஞ்சினித்தாள்! முகிலிற் றங்கும்
திங்களெனும் தன்முகத்தை வான நெஞ்சில்
தோய்த்தபடி மகிழ்ந்திருந்தாள்; கருப்பன் எண்ணம்
தங்கிற்றோர் நொடிவந்து துணுக்குற் றாளாய்த்
தடந்தோளை நீக்கியவள் ''அத்தான்'' என்றாள்;
பொங்கிற்றே யவனுள்ளத் தின்பம் அந்தப்
பூரிப்பால் அன்பொழுக 'வள்ளி' யென்றான்; 8

''வானத்தை வெண்ணிலவு பிரிந்த துண்டோ?
வார்கடலை வெள்ளலைகள் துறந்த துண்டோ?
மானத்தை மறத்தமிழர் மறந்த துண்டோ?
மறந்ததிலை! துறந்ததிலை! பிரிந்த தில்லை;
ஏனத்தான் நாமுமவ் வாறு தானே;
இயம்பிடுவீர்'' என்று சொல்ல, ''எழிலைக் கொண்ட
சீனத்துப் பாவையே மறப்ப தென்னின்
செந்தமிழை மறந்தவனாய்ப் போவேன்'' என்றான். 9

''பெற்றவளைத் துறந்துவிட்டேன்; அன்பைக் கொட்டிப்
பேணிவந்த தந்தையினை யிழந்து விட்டேன்!
சிற்றிடையில் எனைவைத்து நிலவு காட்டிச்
சிரித்திடுங்கால் சோறூட்டி வளர்த்த பாட்டி,
இத்தரையில் இல்லை! எனக் காவதெல்லாம்,
இருந்துவரும் பாட்டன்தான்! அத்தான் உம்மைப்
பற்றுகின்ற கொடியதனைத் தளர்த்தி வாழ்வைப்
பாழாக்கி விடவேண்டாம்'' என்று கூற, 10

தொத்திவரும் கிளிதன்னைப் 'போ போ' வென்று
 தொங்குகின்ற பழக்குலைதான் கூற லுண்டோ?
கத்திவரும் வண்டினத்தை வேண்டா மென்று
 கழறுகின்ற மலர்க்கூட்ட முண்டோ? அன்பே!
செத்தொழிதல் வாழ்வாகும் நமக்காம் என்றால்
 சிரித்தபடி மரித்ததனை அடைவோம்" என்றான்!
தொத்தினாள் தடந்தோளை! தழுவிக் கொண்டான்!
 தோகையினை தெழிற்குழலை நீவி நின்றான்! 11

பெரியவரின் நினைவுவர "அத்தான் மாலைப்
 பொழுதாகி விட்டதினித் தாத்தா மீள்வர்
பிரியும்படி யாகிவிட்ட ததற்குள்' என்றாள்!
 பேடுதனைத் தழுவியவன், "அன்பே, உன்னைப்
பிரிதலினாற் பெருந்துன்பம் மிகுதல் போலும்,
 பேரிருளும் சூழ்ந்துவிடும்! எனினும் காலைப்
பரிதியினுக் கொதுங்குகின்ற இருள்போல், உன்னைப்
 பார்ப்பதனால் ஒழிந்துவிடும் துன்பம்" என்றான்! 12

ஆடுகின்ற கொடியொன்றின் மலரைக் கிள்ளி,
 அணிமுகத்தை யேந்தியவள் குழலில் வைத்தான்!
வாடுகின்ற உள்ளத்தோ டவனை நோக்கி,
 "வருவீர்அத் தான்நாளைக்" கென்றாள்; அன்னான்
'தேடுகின்ற நிலைவாரா' தென்று கூறித்
 தெரிவையிடம் விடைபெற்றுப் பிரிந்து சென்றான்!
நாடுகின்ற பொருள்வேறு; செயல்கள் வேறு!
 நாட்டமெலா மவன்மீதா யானாள் நங்கை. 13



# இயல் : 9

புன்னையில் உள்ள சிட்டுப்
போகாது தென்னைக் கென்றாள்!

நங்கையின் செயலி லெல்லாம்
நலிவினைக் கிழவர் கண்டார்!
பொங்கிய மகிழ்வு தன்னால்
புன்னகை விளையும்! ஏதோ,
தங்கிய வருத்தம் அந்தத்
தன்மையை மாற்றும்! இன்னே
கங்குலும் ஒளியும் மாறும்
கருத்தென்ன வென்று கண்டார்! 1

ஒருங்குற மாலை கட்டி
'ஒக்குமோ ஒக்கா தோஅப்
பெருங்குன்றத் தோள்கட்' கென்பா
பெரியவர் கண்டு விட்டால்,
மருங்கொடிந் திடுவாள் போல
நாணுவாள்! நகைப்பாள்! நீண்டு
நெருங்கிய புருவங் கொண்ட
நீழ்விழி சுருக்கிக் கொள்வாள்! 2

தினையினை உரலி லிட்டே
இடிக்கையில் அவனைப் பற்றி
நினைவினால் உலக்கை மாறி
நல்லுரல் மீதிற் பாயும்
சுனைநீரைக் கொணர்ந்து சாலிற்
சாய்க்கையில் நிறைந்த தென்னும்
நினைவற்று மேலும் ஊற்றி
நீர்வழிந் தோட நிற்பாள். 3

தண்ணீரைக் கொதிக்க வைத்துத்
"தாத்தாநீர் வருக" வென்றாள்!
புண்ணுடல் கழுவல் போலப்
பெரியவர் உடலை நீவி,
மண்ணினாள்! தானும் பின்னை,
மணியுடல் குளித்து வந்து,
பண்ணியம் உண்ணச் சொல்லிப்
பாவையும் உண்ணச் சென்றாள். 4

பண்ணியம் உண்ட பின்னைப்
பெரியவர் வெளியில் வந்து
திண்ணையி லமர்ந்த வாறு
வெற்றிலை மெல்லும் போது
கண்ணையன் அங்கு வந்தான்!
கிழவரோ அவனை வந்து
திண்ணையி லமர வைத்து
வரவினைத் தெரியக் கேட்டார்! 5

"திருமணம் பற்றிக் கேட்க
தினமும்நான் உம்மைத் தேடி
வருவதும் போவ தும்நல்
வகையில்லை; நீங்கள் பெண்ணைத்
தருவது பற்றிக் கொண்ட
முடிவென்ன உரைப்பீர்" என்று
புருவத்தை உயர்த்திக் கேட்டான்;
பெரியவர் அமைதி பூண்டு, 6

"முடிவான எண்ணம் என்ன?
முடிவினில் பார்ப்போம்" என்றார்!
"படிவான பேச்சாய் இல்லை;
பாவையைக் கேட்பீர்" என்றான்!

அடிவானச் செம்மு கத்தோ(டு)
　　அவளங்கு வந்து 'தாத்தா,
முடிவாகச் சொல்வீர் உள்ளம்
　　மணத்தின்மே லில்லை' என்றாள்! 7

"என்னைநீ மணந்து கொள்ளத்
　　தடையென்ன?" வென்று கேட்டான்!
"புன்னையில் உள்ள சிட்டுப்
　　போகாது தென்னைக்" கென்றாள்!
"உன்னைநான் வாழ வைப்பேன்
　　ஒப்பிடு" கென்றான்; கிள்ளை
பொன்னுக்கோ உள்ளம் இல்லை;
　　பகட்டுவாழ் வாகா" தென்றாள். 8

"பொருளிலார் வாழும் வாழ்விப்
　　புவியினில் நிலையா" தென்றான்!
"பொருளுடை யொருவன் வாழ்வுப்
　　பொழுதெலாம் சேர்ப்பி னும்நல்
அருளுடை யொருவன் வாழ்ந்த
　　அரைநொடிக் கொப்பா காதே!
அருளொடு பொருளைச் சேர்ப்பின்
　　அவனின்பம் பிறருக் காகும்; 9

அருளிலா வாழ்வு தன்னால்
　　ஆகுவ தென்ன! அந்த
இருளுடை வாழ்வு வேண்டாம்!
　　ஏழ்மையின் இன்பம் மேலே!
பொருளினுக் கிசையும் பெண்டிர்
　　புவிதனிற் பலபே ருண்டு!
மருளுடை அவரைப் பார்ப்பீர்!
　　மணந்தனை மறப்பீர்' என்றாள்! 10

சுடுமொழி அவன்உள் ளத்தைச்
சுட்டது! கிழவர், 'அம்மா!
கடுமொழி கூடா' தென்று
கழறினர்; அவனும், 'வள்ளி!
படுமொழி கூறி என்னைப்
பழித்தனை! உள்ள மில்லாக்
கொடுமொழி யாளன் என்று
கூறினை! தவறே' என்றான்! 11

'உம்மைநான் மணக்க மாட்டேன்!
உறுதி'யென் றாளக் கோதை!
'செம்மையை உணர மாட்டாய்
சீரொடு வாழு தற்கே
எம்மைநீ ஏற்க மாட்டாய்
இடிந்துபோம் உன்வாழ்' வென்று
வெம்மைசொல் கூறி நின்றான்!
வெடித்தது கிழவர் நெஞ்சம். 12

'கண்ணையா! பொறுப்பாய்' என்று
கூறவே கிழவர்; வள்ளி,
'வெண்ணையா உருகிப் போக;
வெட்டிச்சொல் உதவா தென்றாள்!
'கண்ணைப்போல் வளர்த்தேன்; இந்தக்
கடிமணம் வேண்டாம், தம்பி!
பெண்ணுக்கு விருப்ப மில்லாப்
பிழைப்பென்ன பிழைப்பா'' மென்றார்! 13

பெரியவர் சொன்ன சொல்லால்
கண்ணையன் அடங்க வில்லை!
'விரிவென்ன? விளக்க மென்ன
வள்ளிநீ என்னை ஏற்றால்

அரியவோர் வாழ்வை ஏற்பாய்!
அன்றிநீ வாழ்தல் என்றும்
அரிதென்றே கூறி விட்டே
அகன்றனன் விரைந்தெ ழுந்தே! 14

முதியவர் கண்கள் நீரை
உதிர்த்தன! வள்ளி நெஞ்சம்
கதியிலாக் கலம்போல் ஆகிக்
கனத்தது! கருப்பன் எண்ணம்
மெதுவாக அவளுள் ளத்தே
மின்னிட வெகுண்டாள்; ஏதோ
சதிசெய்வான் போலச் சென்ற
சாயிலே நினைவு கூர்ந்தாள்! 15

'வெட்டுதல் போலப் பேசி
விட்டனே; அவன்,வெ குண்டால்
பட்டுப்போம் வாழ்வே! என்றும்
படபடப் பாகா' தென்றார்!
'கட்டிய பின்னர் ஏற்கும்
இறப்பிற்கு முன்னி றத்தல்
எட்டுணைச் சிறப்பாம்' என்றே
இயம்பினள் அவர்பால் வள்ளி! 16

'வாதுசெய் தவனுள் ளத்தை
வாட்டினாய் இனிமேல் அன்னான்
சூதுசெய் வானே! உன்றன்
சுடர்விடும் வாழ்வில் நின்று
தீதுசெய் வானே! நம்மைத்
தேற்றுதற் கெவரு மில்லை!
ஏதுசெய் வேன்அம் மா'வென்
றியம்பினார் கிழவர் நொந்தே! 17

‘நோதலேன் தாத்தா! வந்து
    நடப்பது நடக்கட் டும்மே!
சாதலை ஏற்பேன் அந்தச்
    சழக்கனை அடையு முன்னே!
ஆதலின் வருந்த வேண்டாம்
    ஆவதைப் பார்ப்போ’ மென்றாள்!
காதலின் நெஞ்சும், அன்பைக்
    காத்தலின் மறமும் கொண்டாள்! 18

இருமனம் கிழவர்க் கொன்றே,
    இரங்கிடும் அவளுக் கொன்று
செருமனம் கொண்டோன் கொண்ட,
    சினத்தினுக் கடங்கும்; வள்ளிக்
கிருமனம்; ஒன்று காதற்
    கிசைந்திடும்; ஒன்று சீறும்;
இருமனம் அவனுக் கொன்றே,
    ஏங்கிடும்! புழுங்கு மொன்றே! 19



# இயல் : 10

வறுமை வறுமை வறுமை என்றே,
இருகை யேந்தி யிரந்திடும் நிலையை
ஏன்வர விட்டீர்?

ஒன்றாய்க் கலந்த உள்ளத் தொன்றைச்
சென்று கலந்திடச் சென்றாள் குடத்தொ(டு)
அணைந்த தென்றலுக் கவனது நெஞ்சும்
பிணைந்த பாவைக் கவனது நினைவும்
தந்து, குன்றம் தருகின்ற அழகில்
சிந்தும்! அழகினைச் சேர்த்தவன் போல
எழிலொடு நின்றவ னிடத்தவள் சென்று
பொழிலிற் புரண்ட தென்றலின் மேலாய்க்
குளிர்செய் கையால் குன்றுதோள் தடவ
ஒளிசெய் நகையால் ஒண்டொடி பற்றிச் 10
சிற்றிடை அணைந்த சிறுகுடம் நீக்கிப்,
புற்றரை வைத்தான்; பாவையும் அவன்கைப்
பற்றிய வாறவன் பின்செல, அவன்போய்க்
கொட்டிய புனலின் குளிர்ந்த சாரலில்
அமர்ந்தான்; அவளையும் அருகினில் அமர்த்தி!

வள்ளியின் எண்ணம் வாட்டிட, அவள்வெறுத்
தெள்ளிப் பேசிய எண்ணம் கண்ணையன்
நெஞ்சைத் துளைத்திட நிலையிலா தவனும்
செஞ்சொற் கிளியும் சிங்கனும் அமர்ந்த
இடத்திற் கப்பால் இருந்தனன்; இவர்களை 20
அவன்கண் ணுற்றதை அறியார் அவர்கள்!
என்ன பேசுவர்? ஏது நடந்திடும்?
அன்னவன் யாரென அறியா வாறு

பேசினள் என்பால்! பேதை அவனிடம்
கூசுவ தின்றிக், கொடியிடை தந்தே,
அன்னவன் தோளில் அவள்கை யிட்டே
என்ன முறையினுல் இவளிவ் வாறு
நடந்து கொள்கிருள், நாணம் விடுத்தாள்!
கடந்த காட்சியைக் கண்டவர் மறுப்பரே!
பார்த்திடு வோமவர் பயில்வதை என்றெணிக் 30
கூர்த்த விழியொடு கொடும்புதர் ஒன்றில்
மறைந்த வாறிருந் தானவர், மகிழ்வால்
நிறைந்த காதலின் நினைவொடு பேசினர்!

'பூத்திடும் முல்லையிப் பொழுதிற் குள்'ளெனக்
காத்திடும் வாருய்க் காத்திருந் தீரோ!'
என்றே இயம்பினள் இருங்குழற் கோதை,

'நன்றே கூறிஞய் நன்றே கூறிஞய்!
இடைவைத்த குடமும் எனைவைத்த நெஞ்சும்
படைவைத்த கண்ணும் பசிவைத்த உணர்வும்
கொண்ட ஒருத்தியின் கெண்டை விழிகள் 40
காணுமா வென்றே காத்திருக் குங்கால்.
குன்றம் எனக்கொரு கொடுங்கதை கூறிட
நின்று கேட்டேன் நினைவை யிழந்தேன்!
பாதிக் கதையில் பொதிமலர் மாலை
தோளில் விழுந்திடத் திரும்பிக் கண்டேன்!
விட்ட கதையினை விடாமற் கேட்கப்
பட்ட பாடு பலப்பல பட்டும்
குன்றதைக் கூற மறுத்ததே' என்முன்!

'நன்றே அத்தான் நானும் அறிந்திடப்
பாதிக் கதையினைப் பகர்வீர்; மற்ற 50
மீதிக் கதையினை மேலே கேட்போம்!'
என்றவள் இயம்பிட எழுந்த வுணர்வொடு
குன்றம் கூறிய கதையினைக் கூறுவான்!

'விரிதமி ழகத்து வேண்டிய செல்வம்
பரந்து கிடந்திடப் பார்க்கும் இடந்தெறும்
வறுமை வதைத்திட வாடும் மக்கள்
சிறுமை எய்திச் சீரழி கின்றார்!

வாய்ந்த காவிரி வளத்தில் விளைந்து
சாய்ந்த செந்நெலும், செறிந்த கம்பும்,
மேழியின் முனையில் மிளிர்ந்த வரகும் 60
கேழ்வர கோடு கிளர்ந்த சாமையும்,
தும்பித் தலைபோல் துளிர்த்த சோளமும்,
செம்பு நிறத்தில் செறிந்த தினையும்,

துவரைச் செடியொடு தொடர்ந்து விளைந்திடும்
அவரைக் கொடியில் அணைந்த பயறும்,
சிறுமணி வகையும், பெருமணி நிறைவும்
எள்ளொடு கொள்ளும் எழிலொடு விளைந்தே
அடர்ந்த கன்னலும் அங்கிளி கொஞ்சும்
படர்ந்த தென்னையும், பழுத்துச் சரிந்திடும்

வாழையும், வான்தொட வளர்ந்த கமுகும், 70
மாவும் பலவும், மலைவிளை பலவும்,
யாவும் விளைந்திட யாறுகள் நிறைந்தே
உடுக்கைக் கருவியும் உண்டிப் பொருளும்
கிடக்க மக்களின் கிளர்ந்த பசியை
அடக்கிட வழியொன் றறியார் போல
வறுமை வறுமை வறுமை என்றே
இருகை யேந்தி இரந்திடும் நிலையை
ஏன்வர விட்டீர்? இங்குள மக்கள்
கூனு? குருடா? கோழையா என்ன?

காலைச் சங்கொலி காதிற் படுமுன் 80
சேலைத் தலைப்பினை இழுக்கும் மகவை
விட்டுச் சென்று வேலையை ஏற்கு

கட்டிக் கரும்பெனும் கன்னியரோடே,
'இருந்தின் ருகிலும் என்னுடன் மகிழ்ந்தே
ஒருசொல் பேசுவீ' ரென்னும் பெண்ணின்
குவளைக் கண்களைக் கண்ணீர் மறைக்க
ஏக்கம் வந்தவ் வேந்திழை நெஞ்சைத்
தாக்கிட விட்டுத் தொழிலினை ஏற்கும்
இரும்பு நொறுங்கினும் எலும்பு நொறுங்கா
மறம்புனை தோளின் மழவாக ளெல்லாம் 90
உழைத்திடு கின்றுர்! உம்மில் பலபேர்,
மழையெனக் கண்ணீர் உகுத்திட லேனே?

உறுத்திடு வெயிலில் உழைத்துழைத் தேயவர்
கறுத்த மேனி கழறுவ தென்ன?

மேனுட் டாரின் மிகுந்த பொருள்கள்
அத்துணை யாலும் ஆகுவ தென்ன?
இசையும் அதனை எழுப்பும் தட்டும்
அசையும் அலையினை அணைத்துப் பாடிடும்,
ஒலிசெய் கருவியும் உருவம் திரையினில்
நெளிந்து பேசி நிகழ்த்தும் காட்சியும் 100
யாவர்க் குதவும்? யாவர்க் குதவும்?

பணமுள் ளவரப் பொருள்தமை வாங்கிப்
பணத்தைச் சேர்க்கும் பாதையை அமைப்பர்!
ஏழையர்க் கவற்று லாகுவ தென்ன?

ஆழ்ந்த பசியினை அடைத்திடும் புதுப்பொருள்
எவையெவை கண்டார்? எந்தமிழ் நாட்டீர்!

விண்ணை முட்டிய வீடுகள் அமைத்தே
கண்ணொளி குன்றிக் காதை யடைத்திடும்
பசியுடை யோர்கள் படுத்துப் புரள்வதால்
பசிபறந் திடுமா? பலபல நிறமும் 110
அணிபெறும் புனலும், ஆகும் விளைச்சலும்

துணிவுடை நெஞ்சும் திகழ்வன வெங்கும்
வறுமை ஓட்டிடும் வளங்களை விட்டீர்!
பெருமை குன்றிடப் பிழைபல செய்தீர்
பழிபடு வாழ்வைப் படாதென வொதுக்கிநல்
வழிபடு வாழ்வை வகுப்பீர் வகுப்பீர்'

என்றே,

குன்றம் கூறிய கதையினைக் கூறிட
வள்ளியின் கண்கள் வடித்தன நீரை!
அத்தான் இன்றே அறிந்தேன்; 'ஏழைகள் 120
செத்து மடியும் சீரிலா வாழ்வை
ஒழித்துக் கட்டுவ தொன்றே நம்மின்
தனித்த வாழ்வின் தளராக் கொள்கை!
இனித்த வாழ்வில் ஏற்றம் பெற்றோர்
ஒவ்வொரு நலத்தை உடையவ ராயின்
எவ்வள வாகும் இனியமுன் னேற்றம்!

சாதி ஒழிந்து சரிநிகர் என்னும்
நீதி பரவும்! நிலவிடும் அமைதி,
குறைகள் நீங்கிட, கொள்கை ஒதுங்கிட
விரைவினில் மகிழ்வும் விரவிடும் நாட்டில்! 130

'சிங்கன்' என்னும் சீர்ப்பெயர் பூண்டீர்!
எங்கும் மடமை இல்லா தொழித்திட,
நாட்டுமுன் னேற்றம் நாட்டுதற் கேற்ற
கூட்டுற வெப்படிக் கூடிடும் அத்தான்?

பலபல மக்கள் பலபல மொழிகள்
பலபல பழக்கம் பண்பா டொழுங்கும்
கொண்டொரு நாடு கூடுவ தெங்ஙன்?''
என்றாள் வள்ளி! இயம்பிடு கின்றான்;

'ஆமாம் வள்ளி! அவ்வா றமைப்பது
கடினம்; இருப்பினும் கூறிடுகின்றேன். 140

உலகிற் பற்பல ஒழுங்கும், பண்பும்
நிலவி இருப்பினும் நேரெது வளைவெது?
துன்பம் இன்பம் தனித்தனி என்ன—
என்பன வெல்லாம் யாவர்க்கும் ஒன்றும்!

யாவரும் உண்பர்; யாவரும் துயில்வர்;
சாவதும் ஒன்றே; சலியா துழைப்பின்
எல்லா உயிரும் இடர்ப்படும்; இன்னே
எல்லா வுயிர்க்கும் ஏற்ற நியதிகள்
பலவாம்; அதற்குப் புறம்பா யுளதும்
சிலவாம் அந்தச் சிற்சில வற்றுள் 150
ஒழுங்கும் மொழியும் உயர்ந்தும் தாழ்ந்தும்
மழுங்கும் நிலையும் மற்றும் சிலவும்
அடங்கும் வள்ளி! அன்னவை கூட
அடங்கும் அறிவில்; அவ்வறி வால்தான்

கோணல் நிலையெது? கூடா தனஎவை?
நாணல் நிலையெது? நன்மையும் தீமையும்
விளைவது எதனுல்? என்று விள்ளுதல்
விளையும்! அந்த விளைவின் பயனுல்,
பசியெனும் நிலையைக் பொசுக்கிட வேண்டும்
நசியாக் கொள்கை நசித்திட வேண்டும்! 160
என்று பலவா றியம்பிடு கின்றோம்!

நன்று வள்ளி! நாமுள நாட்டிற்
கென்ன பெயரென் றியம்பிடு' கென்றான்!

'திரவிட நாடென'த் தேன்மொழி சொன்னுள்;
'திரவிடம் என்பதன் திரண்ட பொருளினை
அறிவா யோ'வென் றவளைக் கேட்டிட
அறியேன் என்றுள் ஆய்தொடி நங்கை!

'தமிழம்' என்பது தமிழின் பழம்பெயர்!
தமிழம் என்பது வடமொழித் தொடர்பில்
திரமிளம் என்றே திரிந்திடும்! அச்சொல் 170

'திரவிடம்' என்று திரிந்தது! பொதுவாய்த்
'திரவிடம்' என்ற தென்மொழி நின்று
விரிந்த மொழிகள் வெவ்வே றுயின!

தமிழ்மொழி யென்பது தலைமொழி! அதனை
அடுத்துத் தெலுங்கும் அணிகன் னடமும்
துளுமலை யாளமெனத் தொடரும் மொழிகள்
பதின்மூன் றுகும்! பழங்கா லத்தில்
இந்திய நாடு முழுமையும் திராவிடம்
சிந்திய மொழிகளாற் சிறந்தது! வடமொழி
ஆரிய மொழியென வழைக்கப் பட்டதே! 180
ஆரியங் கலந்த அந்தமிழ் மொழியே
பன்மொழி பிரிந்திடும் பாதையை வகுத்ததே!

இம்மொழி யெல்லாம் காலச் சுழலில்
பல்வகை யாகிப் படர்ந்தது! கிடக்க!

தமிழ்நாட் டவர்க்குத் தமிழே விழியாம்!
இன்ன வாறே எந்நாட் டவர்க்கும்!
என்ன வாயினும் எல்லா மொழியையும்
ஒழித்துக் கட்டுதல் ஒவ்வாச் செய்கை!

பழித்துக் கூறலும் படியா தவர்செயல்!
ஆகையி னுற்றுன் அவரவர் நாட்டில் 190
அவரவர் மொழியில் அரசியல் வேண்டும்!
அவ்வகை வந்தால் மொழியால் மக்கள்
ஒன்று படுவர் என்பது திண்ணம்!
ஒன்று பட்ட ஒருமொழி யாட்சியில்
உழைப்போர் வாழற் குதவிட வேண்டும்!"

என்று கூறிட ஏந்திழை 'அத்தான்'
நன்று கூறினீர்! நான்கேட் கின்றேன்:
பலமொழி பகரும் பற்பல நாட்டிடை
நிலவிடும் ஒற்றுமை நிலைக்குமா? வென்றுள்!
'முடியும்! எங்ஙன் முடிந்திடு மென்றுல் 200

படியும் அரசியல் பகுத்திடு வோர்கள்
மற்ற மொழியின் மற்ற அரசியல்
கற்ற புலவரைக் கலந்து கொள்கையை
வகைசெய் திடற்கே வழிசெயல் வேண்டும்!
கொள்கை ஒன்றைக் கூறிடும் முறைகள்
வெவ்வே ருகும்! வேண்டுவ தொன்றை
அவரவர் மொழிகளில் அறிந்திட வேண்டும்!
நாட்டுக் கூட்டுற விப்படி யென்ருல்
நானில உறவும் நன்ருய் முடியும்!'

என்றே இயம்பினன் சிங்கன்! அவன்தன் 210
முன்றின் தோளிற் குங்கும முகத்தைத்
தோய்த்தே, 'அத்தான் திரள்கருத் தறிய
வாய்த்த நிலையினை வாழ்த்து கின்றேன்.

விரிந்த அறிவில் விரிந்த காதல்
செறிந்த அழகில் செறிந்த காதல்
ஒட்டிய வுளத்திற் கெட்டிய காதல்
அட்டியே இல்லை; அழியா தென்ருள்!

சொட்டும் தேனைச் சுவைக்கா தவனும்
கிட்டும் அறிவினைக் கேளா தவனும்
வாழ்வில் முன்னேறி வருவதே இல்லை. 220
ஆழ்ந்த கடலின் அணிமுத் தே'இனி
என்ன குறை'யென இயம்பிய வாறே
பின்னல் இழுத்தப் பாவையின் இதழில்
தன்னிதழ் ஒட்டித் தந்தமுத் தத்தால்
பொன்னொளி படர்ந்திடப் பைங்கிளி எழுந்து,
'தாத்தா நெடுவழி நோக்கிய வாறு
காத்திருப் பா'ரெனக் கூறிய வாறு
பிரியா விடையினைப் பெற்றுப் பிரிந்தாள்!

நிகழ்ந்த காட்சியை நேரில் கண்ட
கண்ணையன் சினந்தான்! கொடுமை 230
பண்ணும் வழியினைப் படர்ந்தது நெஞ்சே!

# இயல்: 11

'திவலைசூழ் மேகந்தாவித் திகைட்பூட்டும் விண்ணைக்கீறி
அவளைநா மடைய வேண்டும் என்னினும் அடைவோ
[மென்றான்'

நெஞ்சினில் கொடுமை எண்ணம்
நிலைத்திடச் சினம் வலுத்துப்
பஞ்சினில் நெருப்புப் பற்றல்
போலவள் ஆசை பொங்க
வஞ்சனை யாலே அந்த
வஞ்சியை அடைய எண்ணித்
துஞ்சலும் ஊணு மின்றிக்
கண்ணையன் உலவ லானான்! 1

அன்றைநா ளிரவில் எண்ண
அலைவுமே லோங்க அவ்வூர்க்
குன்றினை அடுத்த கள்ளிக்
காடொன்றை அடைந்தே அங்கு
நின்றவோர் குடிலுக் குள்ளே
நுழைந்தனன்! குறிச்சி யூரின்
குன்றவர் குடித்து விட்டுக்
*குணட்டிய வாறி ருந்தார். 2

வேட்டுவர் குடித்த வாறு
வெறிகொண்டு நிற்கச் சில்லோர்
ஆட்டமிட் டங்கு மிங்கும்
அரற்றிய வாறு லாவக்

---

* குணட்டுதல்—மயங்கிப் பேசுதல்.

கூட்டத்தை நோக்கி, 'யாரும்
குடித்திடக் கூடா' தென்று
பாட்டினிற் குடித்துக் கொண்டே
பாடிய வாறும் நின்ற 3

காட்சியை உள்ளே சென்ற
கண்ணையன் கண்டு, தானும்
நீட்டிய பணத்தை வாங்கி
நீட்டினுன் ஒருவன் கள்ளை!
வாட்டிய வள்ளி எண்ணம்
வதங்கிடக் குடித்து விட்டு,
நீட்டிய நடை தடுத்து
நிறுத்தினுன் ஒருவன் வந்து! 4

மயங்கிய கண்கள் தம்மால்
மாற்றுனை யுணரா தானுய்த்
தயங்கிய வாறு நிற்கத்
'தம்பிநான் தான்'என் றுனவ்
வ்யங்கிய தோளான்! 'ஓஓ'
கருப்பனு வாவா' என்றுன்!
தியங்கிய நினைவி னுலே
தோள்களைத் தழுவிக் கொண்டார்! 5

இருவரும் குடித்த பின்னை
நீங்கினர் குடிலை விட்டே!
ஒருவரை யொருவர் தாங்கி,
ஊர்செலக் கருப்பன், 'தம்பி!
இருளிலே செல்ல வேண்டாம்!
என்னுடன் இருந்து காலை,
ஒருமுக மாகச் செல்லென்
றுரைத்ததற் கொப்பி னுனே! 6

குடித்துள மயக்கத் தாலே,
குழறிய படியாய்ப் பேசிப்
படுத்தனர்; சிறிது நேரம்
பறந்திடத் தூங்கி விட்டார்!
உடுத்துள உடைகள் எல்லாம்
ஒழுங்கற்றுக் கிடக்கத் தம்மை
அடுத்தவர் வரவு மோரா(து)
அமைதியா யுறங்கி ஞரே! 7

விரைவினி லிரவு நீங்கி
விடிந்தது! விழித்தார்! தீங்கின்
கரைகண்ட உள்ளத் தோடு
கண்ணையன் பேச லானுன்!
'திரையுடற் கிழவர் பேத்தி
தெரியுமா கருப்பா' என்ருன்;
'உரைதரின் விளக்க மாக
உணர்குவன்' என்ருன், தீயோன். 8

'கொடியென வுருவும், வானின்
குளிர்நிலா முகமும், மின்னும்
துடியிடை யெழிலும், காலைத்
தொடுகின்ற குழலும், துன்ப
நொடிசெய்யும் குவளைக் கண்ணும்
நுதலெனும் பிறையும் கொண்ட
தொடியெழி லோவி யத்தைத்
தெரியாதா கருப்பா?' என்ருன்! 9

'அருவியின் குளிர்மை யும்அவ்
வணங்கின துடலும் ஒன்ருே?
குருவியின் துடிப்பும் அன்னுள்
குவியிதழ்த் துடிப்பும் ஒன்ருே?

மருவிடின் உலகத் தின்பம்
மண்டுமா? கண்ணே யா,அவ்
வுருவுடைத் தென்றல் யாரென்
றுரைத்திடு வாயே' என்றான்! 10

'குன்றணை சாரல் தன்னில்
குளிரிள மலரே! வீசுந்
தென்றலாய் உலவு கின்றாள்!
தெரிவைபேர் வள்ளி! அன்னாள்,
பொன்றளிர்க் கைகள் தம்மால்
பூக்களைத் தொடுத்து விற்பாள்!
கொன்றையி னுடலும் ஆரக்
குளிர்மையும் என்ன சொல்வேன்? 11

தேக்கிய இன்ப மெல்லாந்
திகழ்ந்திடு மாறு வீசும்
நோக்கினைக் கொண்டாள்; அந்த
நுண்ணிடை நம்மை வந்து
தாக்கிடும் கருப்பா! ஆடுந்
தளிர்க்கொடி எழிலை வீசும்!
பூக்காரி' என்று சொன்னான்
பூரித்த மகிழ்வி னோடே! 12

பூக்காரி என்ற சொற்போய்ப்
புகுந்ததும் கருப்பன் காதில்
தாக்கிய அதிர்ச்சி தன்னால்
திகைத்தனன்! அவனுள் ளத்தை
ஊக்கிய தச்சொல் முன்னே
ஒருநாளில் வந்து வாய்த்த
'மாக்குயில்' தானா வென்று
தயங்கினன்! உடனே சொன்னான்! 13

'கண்ணையா ஒருநாள் காலை
கடுமழை பெய்த தன்றப்
பெண்ணையிவ் வீட்டி லேயே
பிணைத்திட முயன்றேன்; அந்த
நுண்ணிடை மறுநாள் வந்து
நோய்தீர்ப்ப தாகச் சொல்லி
மண்ணிடை விழுந்து கெஞ்சி
மன்றாடிக் கேட்டுக் கொண்டாள்! 14

வடித்தெழி லணங்கு சொன்ன
வார்த்தையைக் கேட்க வில்லை!
துடித்தனள்! துவண்டு கீழே
சாய்ந்தனள்! தோகை யைப்போய்
எடுத்தணைந் திறுகக் கட்டி,
இதழினைச் சுவைக்கக் கோதை
துடித்தவா றென்னைத் தள்ளித்
தேம்பியே கெஞ்சி னாளே! 15

கெஞ்சிய வாறு 'நாளை
கட்டாயம் வருவேன்' என்று
அஞ்சிய வாறு கூற,
அந்நிலை என்னை வாட்ட
வஞ்சியை விட்டேன்; ஆனால்
வருவதாய்க் கூறிச் சென்ற
அஞ்சுகம் வரவே யில்லை;
அதன்பின்னர்த் தேடி நொந்தேன்! 16

'அவளையா சொல்லு கின்றாய்!
அழகொளி முகத்துப் பூத்த
குவளையா மன்ன கண்கள்!
கண்ணையா! குன்றி லேறித்

திவலைசூழ் மேகந் தாவித்
  திகைப்பூட்டும் விண்ணைக் கீறி,
அவளைநா மடைய வேண்டும்,
  என்னினும் அடைவோ' மென்றான்! 17

கண்ணையன் 'ஆம்ஆம்' என்றான்!
  கருப்பனும் 'பார்பார்' என்றான்!
விண்ணதிர் வகையி னாலே
  வெடித்தது சிரிப்பு! வந்து
திண்ணையி லமர்ந்த வாறு
  தேன்மொழி தன்னைப் பற்றி
விண்ணள வாகப் பேசி
  விளைந்தனர் விளைவு காண! 18



# இயல்: 12

*கூட்டி லுடைந்ததேன் கொட்டுவதைக் காணென்ருள்*
*நீட்டி யிதழ்தந்து நின்று!*

காணு தறிவைக் கண்டவ னிடத்துப்
பூணு தன்மைப் பூண்டவள், மறுநாள்
கிழவர் கைகளில் கிள்ளிய மலர்களை,
அழகுறக் கட்டி அளித்தலும், அவரதை
வாங்கிய வாறு வழியைத் தொடர்தலும்
நடந்த பின்னர் நெஞ்சம் நாடிய
தடந்தோள் மறவனைத் தடம்பார்த் திருந்தாள்!

இடையொடிந் திறுமுன் ஏறுபோ லன்னவன்
நடைகண் டோடி நன்மொழி கூறி
மல்லிகைக் கொடியின் மருங்கில் தங்கிய 10
நன்னிழ லண்டை நடத்தி வந்தனள்!

'உன்னுரு வில்லா ஒவ்வோ ரிடமும்
புல்லுரு மிகுந்து புனையெழில் குறைந்து,
என்னுடல் வாட்டி என்னுயிர் வாங்கும்
வல்லிட மாகி வதைத்தது வள்ளி!'

'எப்பொழு திவ்விரா ஏகிடும் உன்னை
எப்பொழு தடையலாம்' என்றிருந் தவ்விரா
ஏகிய பின்னை ஏந்திழை உன்னை
ஏகா துள்ளத் திருளினைப் போக்க,
நாடி வந்தனன்! நன்மலர் தாங்கி 20
ஆடி அசைந்திடும் அருங்கொடி போன்றே,
நானும்,
உன்றினை வென்னும் ஒருமலர் தாங்கிப்

பன்நினை வென்னும் பருவத் தென்றலுக்
காடிய உள்ளத் தோடலை கின்றேன்!

வாடிய என்னை, வாடா மலரே,
கூடுக' வென்றான்! குன்றெனுந் தோளில்
தன்குளிர் முகத்தைத் தோய்த்(து),என் உயிரே!
பொங்கிய பாலைப் பருகுவ தற்குள்
பொறுமை யிழந்திடின் நாச்சுடு' மென்று 30
'கலகல' வென்று கட்டிய அரும்பாய்
நகைத்தனள்!

அந்த நல்ல நேரத்தில்,
புகைத்த அகிலிற் புன்புகை போலக்
கண்ணையன் வந்தான்; 'கலகல' வென்று
நகைப்பொலி கேட்டதும் மெல்ல நடந்து
மறைவாய் நின்று மங்கையும் அவனும்
உரையா டுவதை உற்றுக் கேட்டான்!

(வேறு)

'கோவைக் கனியிதழில் ஊறிவருந் தேனெனக்குத்
தேவை' எனமொழிந்தான்; 'அத்தானிப்-பார்வைபால்
தேனிருப்ப தாருக்காம்? உங்கட்கே ஆனால்நீர்
சேணிருப்பீ' ரென்றாள் சிரித்து! 1

'கன்னத் தொளிசெய் கதுப்பையுன் பால்வந்து
தின்னத் துடிக்கின்றேன்' என்றுசொன்னான்-'என்னத்
[தான்
கூட்டி லுடைந்ததேன் கொட்டுவதைக் காணென்றாள்
நீட்டி யிதழ்தந்து நின்று! 2

'தேனும் தெவிட்டியதுன் தேனிதழை மாந்தியபின்
ஊனும் மறந்ததென் றன் வா'யென்றான்—'நானும்ஓர்
பெண்தானே அத்தான்! பிரிவின்கா லெப்பொருளும்
மண்தானே' என்றாள் மறித்து! 3

'கண்ணே இராப்போதில் கண்துஞ்ச வில்லாதுன்
எண்ணத்தாற் காய்கின்றேன்' என்றானுக்-கெண்ணித்
'துடித்தவா றுள்ளேன் தெவிட்டாத இன்பம்
வடித்தீவீ', ரென்றாள், 'வரைந்து!'

'முல்லைச் சிரிப்பும் நிலவின் குளிர்முகமும்
தொல்லை விளக்கு'தென் றான்,அவளும்—'இல்லையே
குன்றுநிகர் தோளும் குளிர்செய்யும் நெஞ்சுந்தான்
நின்றுறுத்தும்' என்றாள் நொடித்து! 5

[வேறு]

இன்னே இன்னே இருவரும் தம்முள்
சொன்னதை யெல்லாம் செவிமடுத் தானக்
கண்ணையன்; மீண்டும் கழறினான் சிங்கன்:
புன்னை யிலையின் பொருந்திய சீரடித்
தண்டை யொலித்திட நன்னடை பயின்றே
அன்று பேசிய அருவியின் பக்கம்
இன்றிரா வருக ஏந்திழை யுனக்காக்
காத்திருப்பேன்' எனக், கன்னியும் மகிழ்ந்து,
'காவா திருந்திடக் கடிதில் வருவேன்'
என்றே யியம்பிட எழிலிடைப் பெண்ணைச் 10
சிட்டு பிணையினைச் சிலநொடி கொஞ்சி
விட்டுப் பிரிந்த வகையிற் பிரிந்திட,
கண்ணையன் இவர்கள் காணா வண்ணம்
அங்கிருந் தரைநொடி ஆகுவ தற்குள்
சென்றனன்!

சென்றபின் சேயிழை, சிங்கன்
சொன்ன சொற்களைச் சொல்லி மகிழ்ந்தனள்!
'இரவு வருவாய்' என்றவன் கூறிய
நறவு தோய்த்த நற்சொல் ஒருமுறை
சொல்லிப் பார்த்தாள்! சொன்னதும் நாணம்
அள்ளி விழுங்கிட, அதனை மறந்தாள்! 20

நீட்டி யிதழ்தந்து நின்ற நிலையையும்,
கூட்டி னுடைந்ததேன் குடித்த காட்சியும்,
அன்னவன் கூறிய அழகுச் சொற்களும்,
அன்னவன் கூற்றுக் கவளின் பதிலும்,
வந்து வந்து வள்ளிக் கின்பம்
தந்து தந்து தணிந்த நினைவால்,
பிசைந்த மாவிற் பண்ணிய பாவைபோல்
அசைவின்றி நின்றாள்! அவன்வரச் சொன்ன
இரவுசென் றங்கு எய்திடும் இன்பம்
விரவிட நெஞ்சு வெடிப்பது போன்றே 30
இருந்த துடலும் எரிந்ததே!

அக்கால்

பெரியவர் வந்திடப் போய்க்கைக் கோலினை
வாங்கி மூலையில் வைத்துட் சென்று,
கூடத்துப் பானையின் குளிர்ந்த நீரைக்
கொணர்ந்து கொடுத்திடக் கிழவர் வாங்கி,
காலுங் கையும் கழுவிநீ ரருந்த,
முறுக்கு மீசையில் முத்தாய்த் துளிப்புனல்
இருக்க வள்ளி, 'இடி'யென நகைத்துத்
"தளர்ந்த வயதில் தாத்தா முகத்தில்
வளர்ந்த மீசை வடித்த கண்ணீர் 40
உரைப்ப தென்னவோ உணரேன்' என்றாள்!

நரைத்த கிழவர் நாணு வாறு,
'வஞ்சிக் கொடிக்கு வாய்த்த அறிவை
விஞ்சிய ஒருவனை விரைந்து தேடி,
மணஞ்செய் யாமைக்கு, மனமிக வருந்தி,
வடித்த கண்ணீர் வற்றிடச் சினத்தால்
துடித்த மீசையில் துளிர்த்தது நீ'ரெனக்
கூறிட வள்ளி, குலுங்கிக் குலுங்கி
நகைத்தனள்; அந்த நகைப்பால் கிழவர்
இதுநாள் காணு இன்பம் எய்தினர்! 50
மதுமலர்க் குழலி மகிழ்வொடு மகிழ்வாய்த்

"தாத்தா! அதற்குத் தகுந்த வாறுய்,
கூர்த்த அறிவொடும், குணத்தொடுங் கூடிய
ஒருவர் உள்ளார்.. .!' என்றவள் உணர்த்திய
ஒருமொழி கிழவரின் உளத்தை நெகிழ்த்தது!

"வள்ளி நீசொல வந்தது யாரை?
சொல்லுக' வென்ன, சொல்லிய சொற்களை
ஏனுரைத் தோமென எண்ணிய தவளுளம்!
வீணுரை யேவென விடவும் கிழவற்கு
உளங்கொள வில்லை; 'உள்ளே வாம்மா, 60
அமர்ந்து பேசுவோம்; அறியே னிதுவரை!'
என்றே கிழவர் இயம்பிட அவளும்
சென்றே யமர்ந்து, சிலநொடி தாழ்த்திப்
பெரியவர் கைகளைப் பிடித்துத் 'தாத்தா
அறியாப் பருவத் தன்னை, தந்தையாய்
வளர்த்தீர்! எனக்கு வாடாப் பெருமையும்
அளித்தீர்! ஏதும் அறியா வயதிற்
பலகுறை செய்தும், பலமுறை சினவா
துளமுயர்ந் தென்னை ஒறுக்கா திருந்தீர்!
இன்னும் யானிவ் வுலகின் தரத்தில் 70
சின்ன பிள்ளையே! செய்தது தீங்காய்
இருந்திடின் ஏசா திரங்கி யருளுக!
பெருஞ்செயல் எனதெனின் பெருமையும் உமதே!"
என்றவள் கூறினள்.

எழில்மிகு கன்னத்
தொழுகிய நீரை உணர்ந்த கிழவர்
'அழுதல் ஏனென தழகொளிச் சிலையே!
சுட்ட பாலினைச் சுவைத்த பூனை
கிட்டி நெருங்குதல் கேடென அறியும்!
தீயவர் தம்மைத் தெரிந்திடில் நல்லவர்
தம்மை யுடனே தெளிந்திட லாகும்! 80
உலகம் அறியா துனக் கன்றேயோர்
உலுத்தன் உணர்த்தினன்; உன்மேல் எனக்கும்

நம்புதல் உண்டே! நடந்ததை நவிலெனத்,
தும்பி மொய்குழற் றேகை, மகிழ்ந்து,
கண்டவன் தன்மேல் காதல் கொண்டதும்,
மண்டிய வழகையும், மலைத்தோள் தன்னையும்
அன்றவன் கூறிய அரிய கருத்தையும்,
ஒன்றும் விடாம லுணர்த்திடப் பெரியவர்,
கேட்டு மகிழ்ந்து கிளத்திடு கின்றூர்.

'கோட்டுப் பூவினைக் கொம்பினில் வளைத்துக் 90
கைகளில் வைத்துக் கண்டு மகிழ்பவன்
பொய்ம்மை உளத்தவன்; போய்ப்போய் நாளும்
பூத்த அழகைப் பார்த்து மகிழ்பவன்,
மெத்த அறிவினன்; மெய்மையன்! அதுபோல்
ஒத்த முறையில் ஒழுகிடு! நெஞ்சின்
உணர்வை வளர்த்துன் உடலுணர் வெய்திட
நினைவுகொள்' என்று நிகழ்த்தினர்; வள்ளி
இன்புற் றுளே! இருப்பினும் இரவில்
வருக வென்றே வனிதைக் குரைத்ததை
மறைத்தே வைத்தனள்; கிழவரும் 100
உரைத்த நிகழ்ச்சியால் உளமகிழ்ந் தாரே!



# இயல் : 13

'கொட்டி விட்ட தேன்கூட்டைச்சுவைத்து நிற்கும்
குறவாஇக் குறத்தியினுக் குறவா?' வென்றான்

*மகிழ்ந்தனள், சிங்கன் கொண்ட*
*மாக்குன்றத் தோளை யெண்ணி!*
*திகழ்ந்தவன் அறிவைக் கேட்டு,*
*திகைப்புற்ற கிழவர் உள்ளம்*
*நெகிழ்ந்தபோ திவளுள் ளத்தில்*
*நிலைத்திட்ட பூரிப் பின்னும்*
*திகழ்ந்ததம் முகத்தில் வானத்*
*திகழொளி நிலவு போலே!* 1

*வெள்ளிய நிலவு வான*
*வெளியினில் மிதந்துள் ளத்தை*
*அள்ளிய தவனின் எண்ணம்*
*ஆழியின் அலைபோல் மோதும்!*
*நள்ளிருட் போதில் அங்கு*
*நடந்திடப் போவ தென்ன,*
*வள்ளிதன் நெஞ்சை இன்பம்*
*நிறைப்பதைக் கண்டு நின்றாள்!* 2

*(வேறு)*

*படுத்துள்ள கிழவரது, குறட்டை ஓங்க,*
*பைங்கொடியோ நலுங்காது படுக்கை விட்டே,*
*அடுத்துள்ள குன்றடியில் அருவி கொட்டற்*
*கருகிலுள்ள புற்றரைக்கு விரைந்து சென்றாள்!*

கடுத்துள்ள கால்களுக்குத் தேர்வு கூறி,
கழறுகின்ற நெஞ்சினுக்குத் தணிவு கூறி,
தடுத்துள்ள புதர்விட்டு வெளியில் வந்து,
தடம்பார்த்துச் சிங்கனிதைப் பாடி நிற்பான்;- 3

(வேறு)

எண்ணங்களைப் பெயர்த்தாள்—நெஞ்சிலவள்
எண்ணத்தை வைத்துச் சென்றாள்!
கண்ணின் ஒளித்திரையில் அன்னவளின்
கட்டெழில் தீட்டிச் சென்றாள்!
பண்ணின் சுவை மொழியை-என்றன்செவிப்
பக்கத் திசைக்க வைத்தாள்!
விண்ணில் மண்ணில் அவளை-நான்தேடும்
எண்ணம் மறந்தாளோ?-விரைந்
தின்று வருவாளோ? 4

போர்த்த கருமுகிலில்-கூந்தலுஞ்செம்
பூவில் அவள் முகமும்,
ஆர்த்திடு வண்டசைவில்-மைவிழிகள்
ஆடும் எழிற் கூத்தும்,
கோத்திடும் முல்லைமொக்கில்-பற்களும்மென்
கோவைப் பழத்துதடும்,
பார்த்துயிர் வாழுகின்றேன்-என்பதையப்
பாவை மறந்தாளோ?-இன்று
பார்க்க வருவாளோ? 5

(வேறு)

வானத்து நிலவொளியால் வழிகள் கண்டு,
வந்தாளக் கோதை! அவன் விரைந்து சென்று
'மீனத்து வெட்டெல்லாம் தோற்றுப் போகும்
மீன்விழியின் வெட்டிற்கு வாயுண் டாயின்,

'ஏனத்தான், நெடுநேரம் காக்க விட்டேன்!
    எனைமன்னிப் பீரென்றே இயம்பும் அன்றே!
வானத்து முழுநிலவே! வாவா!" வென்றே
    வஞ்சியின தொல்லியிடை பற்றிக் கொண்டான் 6

"என்னத்தான் தாத்தாவைத் தூங்க வைத்தே,
    எழுந்துவர ஆகாதோ நேரம்? நீங்கள்
தின்னத்தான் துடிக்கின்றீர்! இடர்ப்பா டெல்லாம்
    தெரிவதில்லை' என்றவுடன் அவன்பிணங்க,
'பொன்னத்தான் அல்லவென் உயிரைக் காக்கும்
    போர்மறவர் அல்ல'வெனக் கொஞ்சிக் கெஞ்ச
'தின்னத்தேன், கேட்கத்தேன் வள்ளி பேச்சுத்
    தெவிட்டிடுவ துண்டோ' வென் றணைத்துக்
                                    [கொண்டான் 7

அணைத்தவனின் கைப்பிடியை விலக்கிக் கூந்தல்
    அவிழ்தல்போ லாய்நழுவ அதனை யேந்தி,
இணைத்திடுதல் போலவனும் இடையைத் தொட்டே,
    இழுத்தருகில் நிறுத்தியவள் முகத்தை யேந்தி,
'பிணைத்தகொடி தளர்வதனுட் பொருளைக் கூறாய்,
    பெண்பாவாய்!' என்னவளோ, நாணத் தாலே
பிணக்கமுற்றாள் போல்முகத்தைக் கவிழ்த்த வாறு
    பேச்சின்றி நின்றவளைப் பார்த்துச் சொல்வான்! 8

(வேறு)

'நானிருக்க எனதாசைக் குகந்தவள் நீயிருக்க-நம்மைச்
    சுற்றிலும் சோலை மறைப்பிருக்க-அதன்
    நட்ட நடுவினில் தனித்திருக்க-இன்னும்
நாணமென்ன? உனக்கான தென்ன? இளம்
    நாணலிடையினைத் தந்திடடி! 9

தேனிருக்கும் மலர் வாயிருக்கும் மணம் உள்ளிருக்கும்-
    தின்றிடத் தீராப் பசியிருக்கும்-இரு [அதைத்
    குன்றெனத் தோள்களி ரண்டிருக்கும்-இன்னும்
தேவையென்ன உனக்கான தென்ன?-இளந்
    தென்றலென வந்தி ணைந்திடடி! 10

வானிருக்க நம்மைச் சுற்றிலும் வல்லிருள் போர்த்திருக்க
வட்டநில வெழில் தானிருக்கக்-காதல் [அதில்
வாட்டிடும் எண்ணம் நமக்கிருக்க-இன்னும்
வெட்கமென்ன? உனக்கான தென்ன? என்றன்
பக்கலில் வந்தெனைத் தொத்திடடி! 11

கானிருக்கும்! மலர் வாரியிறைக்கும் மணமிருக்கும்-குளிர்
காற்றடிக்கும்படி ஊற்றிருக்கும்-அதை
மாற்றிடக் காதற் கணப்பிருக்கும்-நிற்கக்
காரணமேன்? இங்கு நாணுவதேன்-இளம்
ஆரணங்கே யிதழ் மாந்திடடி! 12

(வேறு)

கொட்டிவிட்ட பேச்சழகைக் கோதைப் பெண்ணாள்
குமிழ்சிரிப்பைச் சிந்தியவா றிருந்து கேட்டே,
எட்டிநின் றிருந்தவனின் அருகே வந்தே,
இதழ்தந்தாள்! அன்னவனும் தமிழ்ச்சுவைக்குக்
கட்டிமாம் பழச்சுவையோ வென்று கூறி,
கனியிதழைச் சுவைத்திருந்தான்; அந்நே ரத்தில்
'கொட்டிவிட்ட தேன்கூட்டைச் சுவைத்து நிற்கும்
குறவாஇக் குறத்தியினுக் குறவா?' வென்றே, 13

அதட்டிடுமோர் குரல்கேட்டுப் பதட்டத் தோடே
ஆயிழையும் அன்னவனும் திருபிம்பிப் பார்த்தார்!
'உதட்டினிலே இனிமையுண்டா? உள்ளத் துண்டா?
உரைத்திடுவீர்!' எனவுரைத்தான் கருப்பன்; வள்ளி,
பதட்டத்தால் சிங்கன்தன் தோளைப் பற்றிப்,
பதுங்கிவிட்டாள்· கண்ணையனும் வந்திருந்தான்!
அதட்டுவதற் கஞ்சாத சிங்கன் 'நீங்கள்
ஆர்'என்றான்! அவர்கள்'இடி' போல் சிரித்தார்! 14

'புன்னெஞ்சு படைத்தவரே! வந்த வாறு
போய்விடுங்கள்; புடைத்ததோள் வீங்கு மாயின்
வன்னெஞ்சு முடைந்துவிடும்! வாயா டாதீர்!
வந்துமுன் நிற்காதீர்' என்றே சிங்கன்
கன்னெஞ்சர்க் குரைத்தவுடன் கருப்பன் சீறிக்
'குருவிக்குஞ் சே! உன்னைப் பிழிவேன்' என்றான்.
'தென்னஞ்சா றேஎன்பால் வருவாய்' என்று
தெரிவையினைக் கண்ணையனும் அழைத்து நின்றான்!

நெருங்கிவந்த கண்ணையனின் முகத்தெ லும்பு
நொறுங்கிடுமா றொருகுத்து விட்டான் சிங்கன்!
கருங்குழலின் கோதையினை நழுவ விட்டே,
கருப்பனுடன் போர்செய்தான்! அவனும் வந்தான்!
மருங்கொடிந்து விடுமாறு மாற்றி மாற்றி
மறவர்களைத் தாக்கிநின்றான், சிங்கன்! மூன்று
பெருங்குன்றத் தோள்கட்குள் ஒன்றுக் கொன்று
பொருதினவே! முடிவில்களைப் பெய்தி னார்கள்! 16

நெட்டாகப் போய்வீழ்ந்தான் கருப்பன்; சிங்கன்
நெருங்கினான் கண்ணையன் பாலே! அன்னான்
கட்டாரி எடுத்தவனைக் குத்தச் சென்றான்!
கைதன்னைத் தடுத்ததனை வாங்கிச் சிங்கன்,
விட்டெறிந்தான் கீழதனை நகர்ந்து சென்று
வன்கருப்பன் பற்றிவிட்டான்!; குறியை வைத்து,
விட்டெறிந்தான் சிங்கன்மேல் வள்ளி அஞ்சி
'வீலெ'ன்று கத்திவிட்டாள்! அதற்குள் ளாக 17

'ஐயோ'வென் றலறிக்கண் ணையன் சாய்ந்தான்!
அவனைப்போய்ச் சிங்கனுடன் தாங்கிக்கொண்டான்!
கையூன்றி, யெழுந்தவனைக் கருப்பன் ஓடிக்
கவ்விருளில் மறைந்துவிட்டான்! சிங்கனைப் போய்

மெய்தழுவிக் கொண்டவளாய் வள்ளி அஞ்சி,
முன்வந்தே கண்ணையனைக் கண்டாள்! சிங்கன்
'பொய்தழுவி வாழ்ந்தவனுக் கெடுத்துக் காட்டாய்ப்
போனான்'' என் றான்;அவளும் 'ஆமாம்!'. என்றாள்!

'வஞ்சனவன் வைத்தகுறி என்நெஞ் சிற்கே;
வாள்வந்து கண்ணையனின் முதுகிற் றைத்தென்,
நெஞ்சதனைக் காப்பாற்றி விட்ட' தென்றான்,
'நேர்மைவெல்லும் அத்தான்எப் பொழுதும்'' என்
[றாள்!

வஞ்சியினை வழிநடத்திக் குடிலில் விட்டு,
'வருகின்றேன் காலையில் நான்! நடந்த தெண்ணி,
அஞ்சாதே! வள்ளி'எனக் கூறி அந்த
அணியிரவு நடந்ததுபோல் நடந்து சென்றான்! 19

சென்றவனை நடுவழியில் மறித்தார் சில்லோர்!
சிங்கனுமஞ் சாதவரை விளக்கம் கேட்க,
நின்றவருள் கருப்பன்முன் வந்து நின்று,
'நீதான்அக் கண்ணையனைக் குத்திக் கொன்றாய்!
என்றனையும் தாக்கினை! இங் கிருப்போ ரெல்லாம்
இவ்வூரின் மன்றத்தார்' என்று கூறக்
குன்றனைய தோள்கொண்டோர் இருவர் வந்து,
குரங்குபோல் சிங்கனையே பிடித்துக் கொண்டார்!

மன்றத்தார் தம்மிடத்தில் கருப்பன் கூற்றை
மறுத்தவா றவன்இயம்ப, அவர்கள் கேட்டு,
'மன்றத்தில் சொல்லுங்கள்' என்று கூறி,
மாய்ந்தவுடல் தூக்கிவரும் இருவர் தம்பால்,
'சென்றிந்தப் பிணந்தன்னைச் சோதித் தீமச்
சீர்செய்வீர்' என்றுணை யிட்டுச் சென்றார்!
குன்றத்து வீழ்ந்திடினும் தாங்கு தோளான்,
குனிந்தவா றவர்பின்னைச் செல்ல லுற்றான்! 21

# இயல் : 14

ஆண்ட தமிழரின் அரசியல் வாழ்வில்
இல்லா தொருபழி ஏற்றிட வேண்டாம்!

சென்றவள் குடிலைச் சேர்ந்ததும், கிழவர்
நன்றுறங் கிடஅது நல்லதென் றெண்ணி,
மெல்லென நடந்து, மேனியைக் கீழே
மெல்லெனக் கிடத்தி, மொய்விழி யோடும்
நடந்த கொடுஞ்செயல் நினைக்கும் நெஞ்சொடும்
கடந்தாள் சிலநொடி; கண்ணேங் கியவள்
அயர்ந்து தூங்கினுள்;

அதுகால் யாரோ,
பெயர்ந்து வருவது போல்மெல் லோசை
கேட்டது செவியில்; கோதை எழுந்து
பார்த்து நெஞ்சு பதைத்தனள்! கருப்பன் 10
ஓங்கிய கையில் ஒளிவிடுங் கத்தியும்,
தூங்கிய கிழவரைச் சேர்த்துக் கட்டிடக்
கயிற்றுச் சுருளினைக் கையிலும் கொண்டு
நெருங்கி வந்தான்! நீள்புரு வத்தில்
உருண்டது வெயர்வை! 'ஓ'வெனக் கதற
வாயெடுத் தாளை வாளினைக் காட்டி,
வாய்மேல் விரலை வைத்தவன் சொன்னுன்!

'கள்ளி! தப்பிய கானப் புறவே!
கிள்ளிய இறகொடு கிளம்ப எண்ணினே!
ஒலிசெய் வாயின் உயிர்பறித் திடுமிவ் 20
வொளிசெய் கைவாள்; உணர்ந்திடு' கென்று
தூங்கிய கிழவரைத் தட்டி யெழுப்பிட
'ஆ'வென் றலறினுர்! அன்னவர் வாயில்
துணியைச் சுருட்டித் திணித்துக் கயிற்ருல்,
கட்டிலில் அவரைக் கட்டிய பின்னர்

மொட்டவிழ் குழலாள் முன்கை தன்னைப்
பற்றி யிழுத்துப் பால்நில வொளிரும்
வெற்று வெளிக்கு விரைந்தனன்; நூலிற்
கட்டி யிழுத்தும் 'கரகர' வென்று
சுற்றியும் மகிழும் சிறுவன் கையின் 30
பொன்வண் டென்னப் பேதை மயங்கினள்!

'மின்னல் இடையே! மிளிர்பொன் பாவாய்!
கன்னல் ஊறிடும் கனிவாய் தந்தே,
என்னை அணைந்திடின், ஏற்றம் அடைவாய்!
பொதிமலர் விற்றுப் பிழைக்கும் உன்னடி
மிதிமலர் மிசையின் மென்னடை ஏற்கும்!
பாழ்குடில் வாழும் பைங்கிளி உன்றனைக்
கோள்தொடு மாடத்துக் குயில்குஞ் சாக்கி,
வைப்பேன்' என்றான் வான்கருப் பன்;நேர்
வைத்த நெஞ்சில் வைத்த நெருப்பெனப் 40
பற்றி யெரிந்திடப் பாவை யழுதனள்!

'பெற்றி மறைத்திடும் சாதித் தொல்லையும்
பணப்பேய்த் தொல்லையும், கற்பைப் பறித்திடும்
கயவர் தொல்லையும் குடில்உறை வோர்க்குத்
தொலைவ தெந்நாள்? தோன்றிய மகிழ்வை
அலைக்கை நீட்டி அணைப்ப தென்'றென
எண்ணிய தவளின் ஏழை யுள்ளம்!
எண்ணிடு முன்னர் இரும்பென இடையைச்
சுற்றி வளைத்தது சிற்றறி வோன்கை!

நெற்றி வெயர்த்த நீரும் கண்களிற் 50
கொட்டிய நீரும் கொடுமை நெஞ்சைத்
தளர்த்திட இயலா தாகின; உடனே
நிலத்திடை வீழ்ந்து, நெட்டுயிர்ப் போடு
'வேண்டாம் இந்தக் கொடுஞ்செயல் அண்ணா!
தீண்டா தீர்கள்! தீராக் கறையை

களங்க மில்லாக் காரிகை உள்ளத்
திலங்க விட்டே, எனைமாய்க் காதீர்!
வேண்டாம்! வேண்டாம்! விடுங்கள் விடுங்கள்!

ஆண்ட தமிழரின் அரசியல் வாழ்வில், 60
இல்லா தொருபழி ஏற்றிட வேண்டாம்!
எள்ளி நகையாடி இழித்தும் பழித்தும்,
பிறர்தம் ஒழுங்கைப் புறத்தில் தள்ளி,
அறமும் மறமும் அறிவோ டியங்கும்
உயர்ந்த தமிழ்நாட் டொழுங்கே ஒழுங்கெனும்
மாய்விலாக் கொள்கையை மாய்த்து விடாதீர்!

மாசிலா இந்நாட்டு மங்கை ஒருத்தி
மாசு பட்டிடின் மாயாப் புகழைப்
பேசுதமி ழேட்டிற் போகாக் கறையே!
ஏசும் பிறநாட் டிலக்கியம் நம்மை!
காலில் விழுந்துகண் நீரா லுங் காலைத் 70
தூய்மை செய்கின்றேன்; துளிமகிழ் விற்கோ
வாய்மை யிழப்பதென் அண்ணு! விடுவீர்!'

என்றே பலவா றியம்பிய பின்னர்,
நின்றவன் சிரித்த நீளச் சிரிப்பில்
அத்துணைக் கருத்தும் அடங்கிடத் தொடர்ந்து
'கூடும் வேளையிற் கூறிய அறிவெலாம்
ஓடும் புனல்வீழ்ந்த ஒருதுளிக் கொப்பாம்!
அன்றில் பேடே! அணைகென வந்தே'
என்றிளங் கொடியை இழுத்தவன் அணைத்துத்
துடித்த நெஞ்சொடும் துவளும் உடலொடும் 80
பிடித்த பிடிக்குப் பேதை மயங்கினள்!

பெரும்புயல் வீசிடப் பைங்கிளி யுள்ளத்
திருள்சூழ் வதுபோ லிருந்தது! மாற்றுன்
படையினைத் தகர்த்துப் புகழ்மிக நின்ற
குடையினைக் காத்த குன்றுதோள் மறவன்

போலவன் நின்றான்! புள்ளுவன் எய்திய
வேல்பட் டிறந்த விளர்மான் போலும்
தரையில் கிடந்த தளிர்க்கொடி யைப்போய்
நிறைந்த நெஞ்சொடு நெடுவான் கருப்பன்,

ஒருமுறை நோக்கி ஒருநகை சிந்தப், 90
பெருஞ்சினங் கொண்டு பிதற்றிய சொல்லை,
அரற்றிய வாறாய் அவள்விரைந் தெழுந்து
வெறிகொண் டறைய ஓங்கிய கையை,
யாரோ தடுத்தனர்; யாழிசை நங்கை
அஞ்சி நடுங்கி அலர்விழி திறக்கப்
டஞ்சுடற் கிழவர் பக்கத் திருந்தார்!

காலை மலர்ந்த கதிரவன் ஒளியவள்
மேல்விழுந் தழகை மெருகொடு காட்டும்!
கருப்பன் வந்ததும், கட்டிலிற் கிழவரை
இறுகக் கட்டி இவளை யணைத்திடக் 100
கண்டதும் யாவும் கனவென் றுணர்ந்தனள்.
அண்டையி லிருந்த கிழவர் அவளது
நுதலை நீவி, 'நீயுறங் குங்கால்
பிதற்றினை யம்மா? பெருங்கன வோஅது?
யார்யார் வந்தார்? நடந்தது யாதோ?'
என்று விளித்தார்!

இரவில் நடந்ததும்
கண்ணையன் தன்னைக் கருப்பன் கொன்றதும்
சொன்னாள்; உடனவர் சேயிழை தன்னிடம்
'வள்ளிநான் சொன்ன வாய்மை யாவையும்
தள்ளினை! நீயுமத் தடந்தோள் மறவனும் 110
இளமை பொறுமையை இழந்திடும் என்னும்
நிலையினை உணர்த்தினீர்? நேற்று நடந்தவை
ஒருபால் கிடக்க; உன்மன மேறிய
மறவன் இன்று வருவனோ? உரை'யென
'வருவார், வருவார்' என்றனள் வள்ளி!

'அருமை மகளே! அன்னவன் கொண்ட
பெருமை தன்னைப் பார்த்திடு கின்றேன்'
என்றவர் கூறிட ஏந்திழை,
குன்றத் தோளனைக் குறிபார்த் திருந்தனள்!



# இயல்: 15

பெண்ணைப் பேணிய பெருமையிந் நாட்டு
மண்ணிற் குரியது!

இருந்த நூல்பயின் றேறிய கருத்தைத்
தெரிந்து தெளிந்து தேர்ந்த புகழ்மிகும்
செவ்விய அறிவினர் சேர்ந்தஅம் மன்றம்
அவ்வூர் நடுவில் அமைந்தி ருந்தது!

கண்ணையன் தன்னைக் கொன்ற செய்தி
எண்ணெய்த் துணியில் எரிபர வுதல்போல்
விரைவில் அவ்வூர் மக்கட் செவிகளை
நிறைத்திட மன்றில் நிறுத்திய சிங்கனைக்
காண விரைந்தனர்; கருப்பன் மகிழ்வொ(டு)
ஆன கொலையில் அவனொடு தொடர்பும் 10
இல்லா தவன்போல் இருந்தான்; மன்றத்
தெல்லாப் புலவரும் எய்திய பின்னர்
வழக்கு நடந்தது; வந்திருந் தவரின்
முழக்கம் நின்றது; முதியவர் ஒருவர்
எழுந்து நடந்திட விருக்கும் வழக்கின்
முன்கதை கூறி முடித்த பிறகு
மன்றில் ஒருவர் கருப்பனை அழைத்தே
'உனக்குத் தெரிந்தவை உரைப்பாய்' என்னக்
கருப்பன் எழுந்து கூறிடு கின்றான்;

'எனக்குத் தோழன் இறந்த கண்ணையன்; 20
அவன்பல நாட்களாய் அதோ நிற்கும்
சிங்கனின் சூழ்ச்சியில் சிக்கிய வள்ளியை
அறிவான்; அவளும் அன்னவன் மேலாய்க்
குறிதான்; இருவரும் கொண்ட எண்ணத்தால்,

காதல் கொண்டனர் ; கன்னியன் தன்னை
அவளும் மணந்திட ஆசை கொண்டனள் !

அவளை அவனும், அவனை அவளும்
தத்தம் உளத்திற்குத் தக்கவர் என்றே
எண்ணி இருந்தனர். எங்கோ இருந்து
சிறுநரி போலிச் சிங்கன் வந்தபின் 30
கன்னியன் பாலவள் காட்டிய அன்பு
மண்ணாய்ப் போனது !'

'மாண்ட நண்பன்
உயிரோ டிருந்திடில் ஊறுவருமென
எண்ணிய இவனோ என்னருந் தோழன்
கன்னியன் தன்னைக் கொலைசெய் திட்டான் !
செருக்கன் இவனைச் சிதைத்தெறி யாமல்
இருக்க விட்டால் இன்னும் தொல்லையே ! '

—என்று பேசி இறுமாந்து அமர்ந்தபின்
மன்றத் தொருவர் மீண்டும் எழுந்து
சிங்கனை நோக்கிச் செப்பிடு கின்றார்; 40

"இங்குப் பேசிய இவரது கருத்தில்
வேறு பாடுகள் விளக்குவ தாயின்
கூறுக, அமர்ந்துள குழுஅறி யட்டும் !"

பழந்தமிழ் பயின்ற பேரறி வாளர்முன்
எழுந்து வணங்கி இயம்பிடு கின்றான்;

"அழகுப் புனல்நாட்டை ஆண்டதமிழ் மன்னர்
பழகிய நெஞ்சொடும் பயின்ற அறத்தொடும்
நின்ற வழிதனில் நின்றறங் கூறும்
மன்றிற் கென்றன் மனமகிழ் வாழ்த்து !

பெண்ணைப் பேணிய பெருமையிந் நாட்டு 50
மண்ணிற் குரியது ! மாற்றார் வந்தபின்
ஆரியர் ஒழுங்கும், அயலார் பழக்கமும்
ஊரில் பரவி உயர்ந்த நம்நாட்டு

ஒழுங்கை அழித்ததே ! உலுத்தர் சிற்சிலர்
முழங்கிய அறிவொடு மாற்ருர் கொள்கையை
உரமிட் டுயர்த்தினர் ! ஊராள் வோரும்
திறமற் றிருந்ததால் திருந்துவ தின்றி
மக்கள் மாறினர் ; மங்கையர் எல்லாம்
பக்கத் துணையின்றிப் பழகவும் அஞ்சினர் !

இவனைப் பேன்ற கயவர் மலிந்தார் ! 60
நாட்டு நலத்தை நாடுவர் போல்நம்
நாட்டுமுன் னேற்றம் நசுக்கி வந்தனர் !

செல்வர் போர்த்திய செல்வப் போர்வையில்
கள்வர் திரிந்தார் ! கற்பைக் கொட்டி,
தம்நலம் தேடிய தமக்கையோர் சிலரைப்
பணநலம் மறைத்தது ! பாதி உடலை
மூடி மறைத்திட முழத்துணி யின்றி
வாடினர் பலபேர் ; வாழ்க்கைக் குறுதுணை
ஏதுமில் லார்க்கே இருந்ததோ உடல்தான் !

போது மலரின் புதுமணம் போல 70
அழகும் இளமையும் அவர்களின் சொத்து !
பழகா மக்கள் பழகினர், அவற்ருல்
இளகா உளத்தவர் இரங்கினர் ! அவற்ருல்
வாணிகஞ் செய்ய வைத்த முதல்போல்
தூணிகர் மேனியைத் தொகையாய் வைத்தனர் !
வந்த இலாபத்தில் வாழ்ந்தது குடும்பம் !
இந்தத் துறையில் இறங்கா தவர்கள்
வண்டி யிழுத்தனர் ; வாட்டும் வெயிலில்
விண்டொடு மாளிகை வேண்டிய எழுப்பி,
மற்றவர் வாழ மண்டியிட் டார்கள் ! 80

இற்றை நாளில் எழுந்த ஆலையில்
பணிசெய் வோரெலாம் பாவையர் தாமே!
துணிவொடு நிற்குந் தோகையர் வாழ்வைக்

கயவன் 'இவன்போல் கொடுமை உளத்தவர்,
நயந்து நாடி நல்லவர் போலப்
பேசிக் கற்பைப் பிடுங்கினர் ; அவரால்
வேசியாய்ப் போனவர் வேண்டிய பேர்கள்!
இறந்தவர் பலபேர் ; இழிந்தவர் பலபேர் !
சிறந்த தமிழ்நாட்டைச் செம்மை யாக்குதற்
கின்ன நெஞ்சுகள் இடிந்திட வேண்டும் ! 90
பின்னைக் கொள்கைகள் பரவிடும் எளிதில்!"

என்று முடிக்குமுன் எழுந்தொரு புலவர்
"நன்று கூறினை! ஆயினும் நாட்டுக்
கருத்தைப் பற்றிக் கேட்டனம் இல்லை!
அறிக !" என்றார், அதற்குச் சிங்கன்,

"நாட்டில் தானே நாமுளோம்" என்று
கேட்டனன் ; மற்றவர் கிளத்தினர் மறித்து
"உண்மைதான் ; நாட்டில் உலவிடும் நிலையின்
தன்மைதான் ஒழுக்கந் தவறற் குறுதுணை !"
என்றே ஒப்பினர் ; சிங்கனும் இயம்புவான்; 100

"நானும் வள்ளியும் நன்றே பிசைந்த
தேனும் தினையும் ! அத் தெரிவையும் நானும்
கடந்த இரவில் களவழிப் பேசிய
இடத்தை அடைந்தனர் இவர்கள் ; பலவாய்த்
துடுக்கொடு பேசித் தோகை மயிலினைப்
பிடிக்க முயன்றனர்! இருவரும் என்னைத்
தாக்கிட நானும் தாக்கினேன்; இத்தீயன்
போக்கிய கைவாள் கண்ணையன் உயிரைக்
குடித்தது ! இதுவே கொலை வரலா"றென
எடுத்துக் கூறினன் ! 110

கருப்பன் எழுந்து
"பேனை எள்ளெனப் பிதற்று கின்றான் !
வள்ளியை இவனே வழிக்கொண் டேகிடக்

கண்ணையன் என்னிடம் காட்டினன்! நானும்
பெண்ணைத் தடுத்திப் பேயனை விரட்டச்
சென்று நிற்கையில் செருக்கன் இவனே,
கொன்ருன் அவனை! கொலைவாள் இடுப்பில்
இருந்தது! நானே இருகண்க ளாலும்
கண்டேன்" என்று கூறிய போது
திண்டோள் படைத்தவர் இருவர் வந்தனர்!

மன்றத் தமர்ந்த மதிதகும் ஒருவர்பால் 120
"கண்ணையன் முதுகைக் குடைந்த வாளிதோ"
என்ருெரு கைவாள் எடுத்துக் கொடுத்திட
மன்றத் தவர்கள் மலைத்துப் பார்த்தனர்!
"சிங்கன்" என்று செதுக்கிய கைப்பிடி
அங்கிருந் தவர்களின் அறிவைக் கிளறிடக்,
கூட்டத் தமைதி குலைந்தது! சிலபேர்,
வாட்ட முற்ற வகையொடு நின்ருர்!

இதுகால்
சிறுவன் ஒருவன் சீட்டொன் றேந்தி
அறிவுக் குழுவினை அணுகி யாரோ 130
தரச்சொன் ஞரெனத் தந்தான்! அந்தச்
சுருளை வாங்கிச் சுற்றி யிருந்த
ஐவர் தமக்கறி வித்தார் ஒருவர்!
அதனுட் கண்டதே அடியில் வருவது!

"மாசறு கல்வியின் மாணப் பெரியீர்!
மாசில் லாத மனத்தவன் சிங்கன்!
கண்ணையன் தன்னைக் கருப்பன் கொன்றதை
இன்னும் ஒருநாள் இருந்திடில் விளக்குவன்
சிங்கனை விடுதலை செய்க! வழக்கினை
நாளை நடத்துக!.............. ........
..............நலம் விழைந்திடுவோன்" 140

ஓலைச் சுருளில் உணர்த்திய கருத்தை

மன்றம் ஆய்ந்தது !' மறுநாள் வழக்கை
நடத்திடு வதுமொரு நலமே பயக்கும் ''
'' தீது வருமெனத் தேர்ந்திடற் கில்லை !
ஏதுக் கும் நாம் இன்று நிறுத்தி
நாளை நடத்துதல் நன்றும் !'' என்றும்
'' நாளை வழக்கில் நங்கை வள்ளியும்
நிறுத்தப் படுதல் வேண்டும்'' என்றும்
புலவர் ஒருவர் புகன்றிட, மற்றவர்
'' நலமதே '' என்றனர். ''நாளை வழக்குத் 150
தொடரும்'' என்று தெரிவித்தார் ஒருவர் !

நின்ற மக்கள் நிலையை உணர்ந்து
சென்றுகொண் டிருந்தனர் ; சிங்கனைப் புலவர்
மறுநாள் அவன்தன் மங்கையோ டங்கு
வருமா றுரைத்தார் ; வணக்கம் கூறிச்
சிங்கன் பிரிந்திடச் சீறிப்
பொங்கிக் குவிந்தது கருப்பனின் உளமே !



# இயல்: 16

அன்று தந்தவன் அணிமுத் தத்தை
இன்று வந்தெனை ஏந்தித் தருவனோ!

உள்ளம் விளைந்த உவகை, காட்டின்
வெள்ளத் தைப்போல் விரைந்திட வள்ளி
சிங்களை நினைத்த சிந்தை தன்னோடு
திங்கள் முகத்தில் தேர்ந்த மஞ்சளை
அரைத்துப் பூசி அகிற்றூள் கலந்த
விரைத்தூள் தன்னால் வேய்த்தோள் கழுவிப்
பொன்னிறப் பசலை மின்னிய வாறு,
தன்னுடல் குளித்துத் தாழ்குழல் தன்னை,
வாரி முடித்து வகைசெய் தன்று
கொடியில் அசைந்த கொத்து முல்லையைப் 10
படிய வைத்தே பெரியவர் தன்னை
அணுகினள்.

அவரோ அழகுச் சிலையை
உற்று நோக்கி உளமகிழ்ந் தவராய்,
"கணுக்கால் தீண்டிய குழலும் நெருங்கி
நுணங்கிய இடையும், நுதலும் கொண்ட
உன்தாய் உருவை உன்றன் சாயல்
உணர்த்து கின்றதே! ஓவியப் பெண்ணே!
கொடியில் தொங்கும் கொழுமலர் தாங்காது,
படிவது போலப் படிந்த இடையில்,
இந்நாள் ஒளிந்த எழில்வெளிப் பட்டதும் 20

புன்னை மரத்தில் புழங்கும் குருகின்
தாழை மூக்கின் நுனிகூர் புருவம்
வாழைப் பூப்போல் வதங்கி யிராது,
காதள வோடிக் களிப்புற் றிருப்பதும்

தெள்ளிய நீரில் திரியுங் கெண்டைபோல்
ஒள்ளரி நெடுங்கண் ஒளியுற் றிருப்பதும்,

நீரின் மையினுல் நெடுங்கொடிக் கோவைச்
சீரிதழ் சுருங்கிச் செழுமை குன்றல்போல்
இதுநாள் கண்ட இறங்கிய செவ்விதழ்
மதுசிந் தாத மரைமலர் நுனிஎழில் 30
பவளச் செம்மை படிந்தொளிர் வதுபோல்
தவழ்நகை பூண்டு திகழ்ந்திருப் பதுவும்,

பின்னிய விரலில் பிணைந்த உள்ளத்து
எண்ணம் மின்னலும், இருந்தவா றிராமல்
இரையொடு வருமென் றெவ்வி நோக்கிடும்
குருவிக் குஞ்சாய்க் குறட்டை நோக்கலும்,

'குடுகுடு' வென்றே கொல்லைக் கோடி,
நெடுவழி நோக்கி நீளதிர் பார்த்தலும்,
ஆகிய புதுச்செயல் அத்துணை என்னே?
ஏகிய அவன்வழி ஏந்திய பெண்ணே! 40

என்று பலவா றியம்பிய கிழவர்
மீசை மறைத்த மென்வாய் விரித்தே
ஆசை வெள்ளம் அவர்கண் வழிவர,
மென்றோள் குலுங்கி மிகுவாய் நகைத்திடத்
தென்றல் புரட்டிய மென்றுகில் சீர்செய்
தியம்பினள் இன்னே; 'என்னருந் தாத்தா!
வாரா தவர்சென்று வருவார் என்றே
ஆறு நெஞ்சோ டலைபவள் இல்லை!

சென்றவர் என்றன் சிந்தையில் உளரே!
குன்றங் காணில் குவிதோள் கண்டும், 50
வானங் காணில் விரிமார் புணர்ந்தும்,
தண்புனல் தொட்டவன் தளிருடல் உணர்ந்தும்,
செந்தேன் தன்னில் தினைமாப் பிசையின்
சந்தனக் கைகளின் முயக்கினை யியைந்தும்,

வருவேன் அறிந்திட வல்லீரோ? வென்றே
அடுக்கிய முல்லையின் அரும்புப் பற்களைக்
காட்டி மகிழ்ந்தனள்; கிழவரும் மகிழ்ந்து,

'ஓட்டினேம் காற்பொழு' தென்றே யுரைத்து
'வள்ளி, அவன்வரும் வழியினைப் பார்த்தால்,
கிள்ளும் வயிற்றின் கிளர்பசி யடங்குமோ? 60
ஒருகால் உன்பசி ஒடுங்கினும் ஒடுங்கும்!
எரியா யுறுத்திடு மென்வயி' றென்று,
கட்டிய பூக்களைக் கையில் வாங்கித்
தட்டுங் கால்களைத் தடுத்து நிறுத்திடும்,
கோலினை யெடுத்துக் கொண்டவர் அந்தச்
சேலினைப் பழிக்கும் விழியினை விளித்து,
'விரைவில் திரும்புவேன்; வேலையை முடித்திடு!
கறையில் மனத்தவன் கண்டனை யாயின்,
நிறுத்தி வைத்திடு, நீ'எனக் கூறிச்
சென்றார்; சென்றிடச் சேல்விழி, ஓடி, 70

நின்றே ஒருமுறை நெடுவழி நோக்கி
'அன்று தந்தவள் அணிமுத் தத்தை
இன்று வந்தெனை ஏந்தித் தருவனோ!

அன்று வந்தவன் அணைத்திட அன்னவன்
குன்றுத் தோளில் கொடியாய்ப் பின்னிய
என்கை யின்றவன் எயிற்றோள் தழுவுமோ?

என்நுதல் நீவிய அன்னவன் கைகள்
பொன்னுடல் நீவிப் பிணையுமோ வின்றே?
நெஞ்சே உரைத்திடு நெஞ்சே உரை'யெனக்
கொஞ்சிய வாருய்க் கோதை பாடினள்: 80

கொல்லையில் கூவிய குயிலின்
உள்ளத் தவன்றன் உருவம் திகழ்ந்ததே!

# இயல் : 17

பொருள்கண்டு மறங்கண்டு போற்றும் பொன்னுடே
இருள்கண்டு மருள்வோரை எற்றுக்குப் பெற்றெடுத்தாய்?

திகழ்ந்த அழகொடு தெரிவை விளங்கிப்
புகுந்து நெஞ்சினைப் புணர்ந்தவன் வரவைக்
கோணல் அரசியற் கொடுமை யாளரை
நாணல் களைவது போல்களைந் தகற்றி
நாட்டு மக்களின் நலங்காத் தன்னவர்
மாட்டுத் தம்முயிர் மாய்த்திட வெண்ணும்
உயர்ந்த கொள்கை உடையவர் அரசினை,
அயர்ந்த மக்கள் அடைந்திட ஏங்கும்,
ஏக்கம் அந்த ஏந்திழை உள்ளத்
தாக்க முற்றதே! அன்னவன் வரவை, 10
நோக்கிய நுண்ணிடை, நோவதும் பின்னவன்,
தேக்கிய அறிவைத் தேர்ந்து மகிழ்வதும்,
வானில் சூழ்ந்த வன்முகில் பரிதியைச்
சிலநொடி மறைத்துச் சின்னிழல் தேக்கியும்,
பின்னர் விடுப்பதும் போன்றிருந் ததுவே!
முன்னர் இசைத்த மொய்குழல் மீண்டும்
இசைத்தாள் ஓரிசை!

'பழக்குலை அங்கும் பைங்கிளி இங்கும்
குழலிசை அங்கும் கொள்செவி இங்கும்;

விரிசுனை அங்கும் விடாய்ப்பெண் இங்கும், 20
சொரிதேன் அங்கும் சுவைப்பவ ளிங்கும்;

பொறிவண் டங்கும் பொதிமலர் இங்கும்;
உறித்தயிர் அங்கும் உண்பவள் இங்கும்;

காட்சிகள் அங்கும் கட்பொறி இங்கும்;
பாற்சோ றங்கும் பசித்தவ ளிங்கும்;

என்னும் இந்நிலை ஏன்பொறி வண்டே!
புன்னைச் சிட்டே போ! போ! அவனிடம்!
வெட்டிய கன்னல் வீழ்ந்தது! வந்து
கட்டிக் கொள்ளெனக் கழறுக!

காற்றில்

துள்ளிய வாறுள தேன்மலர் தன்னைக் 30
கிள்ளிக் கொள்கெனக் கிளத்துக!

மாசில்

இசையாழ் ஏந்தி இன்தமிழ் பாடி,
இசைப்பாய் என்றே இயம்புக!

மறுவில்

இளமை பொருந்திய ஏந்திழைக் கின்பம்
விளைப்பாய் என்றே விளம்புக!

முன்கை

ஆர்த்திடும் ஒளிவளை அணிந்தவட் கின்பஞ்
சேர்த்திடு கென்றே சிலம்புக!

சீர்தரு

நெற்றி யணுகிய நெடுங்கண் முகத்தினை
ஒற்றி மகிழெனு உணர்த்துக! சிட்டே!
தென்றல் ஊர்ந்தே தெரிவையை அணுகென 40
நன்றே உணர்த்துக! நன்றிசெய் சிட்டே!'
என்றவள் இசைக்கும் இசையை நிறுத்துமுன்,
'நன்று நன்'றென நவின்றார் யாரோ!
எங்கோ பறந்தவள் எண்ணம் மீண்டது!
தங்கிய இன்பம் தகர்ந்திட வெகுண்டு,
'யாரவர்' என்றே யாழ்நரம் பறுந்த
வாறவள் கூறிய வன்குரல் அடங்குமுன்,
வண்டு பறந்திடும் வார்குழல் ஒருத்தி
மண்டிய அழகெலாம் மறைப்பது போன்றே,
மென்றுகில் உடுத்து, மின்னும் முகத்தொடு 50
நின்றாள் அவள்முன்; நெற்றி சுருங்கி

அகல்நெடுங் கண்கள் அகன்ற வாறுய்ப்
'புகலுக நீயார் ?' என்றனள் வள்ளி !
'வள்ளி நீதானே ? வயங்கொளி வான
வெள்ளி நிலாவே விளம்புக!' வென்றான்!
'ஆம் ஆம்! நானே அன்னவள்! நீயார்?
ஆம்பி இடையே! அறிவித் திடு'வென
'மருக்கொழுந் தென்பெயர்; மங்கையுன் நெஞ்சில்
உருக்கொண் டானின் உறவினன்! சிங்கன்
அண்டை வீட்டவன்! அன்னவன் பலமுறை 60
கெண்டை விழியுன் கீர்த்தியை எல்லாம்,
சொல்லக் கேட்டேன் செவியும் மனமும்,
கொள்ளை மகிழ்வால் குதித்திட மகிழ்வேன்.
நேற்றை யிரவில் நிகழ்ந்த கொடுமையைச்
சாற்றினன் என்பால்; சாம்பல் நிறத்த
கருப்பன் எனும் களிமகன் செய்த
வெறுப்புச் செயலும் வெங்கொடு நெஞ்சும்
கேட்டு வருந்தினேன்; கெடுதலை அடைவான்!
கோட்டுக் குயிலே! கொண்ட வருத்தம்,
விடுக!'' என்று விளம்பினள்! 70
விளம்பக்
'குடுகுடு' வென்றே கோதை ஒடிப்,
பாயை விரித்துப் பரிவோ டமர்கெனச்
சொல்லிட, அந்தச் சுரிகுழல் அமர்ந்து,
சொல்லிட லானாள்;
"சுரைக்கொடி படர்ந்த
ஓலைக் குடிலில் ஒதுங்கிய குடும்பம்!
வேலைக் கென்று வெளியிற் போவதும்
கண்ணீர் சொரிந்து கைபிசைந்து வருவதும்,
உண்ணீர் இன்றி உடல்நோ யுறுவதும்
அந்தக் குடிலில் அடைந்தவர் நிலைமை!''
'எந்தக் கதையை இயம்பிடு கின்றீர்!' 80
என்று மறித்தாள் இடையில் வள்ளி!

'என்றோ நடந்த இக்கதை தன்னை
உரைத்திட லேனென உரைத்திடு கின்றேன்;
நுரைத்த கள்ளினை நுங்கிய வாயொடும்,
கோவைப் பழமெனக் கன்றிய கண்ணொடும்
மேலாய் ஏறிய மீசையை முறுக்கியும்,
காளை மாட்டின் கொழுத்த உடம்பொடு,
சிற்றிடை கொண்ட சேயிழைப் பெண்டிர்க்குச்
சுற்றிய வாறிச் சூதன் திரிவான்!
கருப்பனைப் பற்றிக் கழறுகின் றேன்கேள்; 90

மேலே சொன்ன மிடிசேர் குடும்பத்
தேலா வாழ்வினை என்னென் பேனுன்!

நோயால் படுத்த நுண்ணிடை ஒருத்தி;
வாயில் லாதான் வரித்தவன்; இவர்களின்
பெருஞ்சொத் தெல்லாம் பிள்ளைக ளாகும்!
வருஞ்சொத் தெல்லாம் வறுமையின் கொடுமை!
தொத்தும் ஒருசேய் தோகை மார்புக்கு!
கத்தும் ஒருசேய் கண்பிதுங் கிடவுயிர்
கொத்தும் பசிக்குக் கோதைமாய்ந் திடுவாள்!
செத்துக் கொண்டிருப் பான்அவட் குரியன். 100

வறுமை வாட்டிட வாடா நற்குணத்துப்
பெருமை வந்தவரைப் பேணிய(து)! அவட்குத்
தங்கை ஒருத்தி தளிர்க்கொடி போன்றாள்!
பொங்கும் உணர்வொடு புதைந்தநல் விளமை,
காயும் வறுமையால் கருகிற்று!

அவள்கண்
பாயும்தம் பாலெனப் பலர்காத் திருந்தார்.
மாய்க்கும் வறுமை மாய்த்திடா ஒழுங்கொடு
வாய்க்கும் பெருமைக் கவள்வாய்ப் பட்டாள்!

ஒருநாள் !

அண்டை வயலில் அறுவடை செய்யப் 110

பெண்டிர் தேவைப் பட்டதே! அந்த
எலும்பெனப் படுத்த இருங்குழல் தன்னிடம்
நலம்புனை நங்கை நவின்றனள் இம்மொழி:-
'அக்கா! உன்றன் அருமைத் தங்கை,நான்
எக்கா லும்உன் இன்னலம் நாடுவேன்,
ஆர்ந்த தினையின் அறுவடைத் தொழிற்கு
நானும் ஏகுவன்! நற்றினை கொணர்ந்து
கூனும் வயிற்றின் கொல்பசி போக்கி
வாடிய கொடியுடல் வளர வைப் பேனெனக்
கூறிய சொல்லைக் கோதை ஒப்பிட, 120

ஏறிய நினைவொடும், ஏறு நடையொடும்,
செல்லும் அவளொடு சேர்ந்தாள் ஒருத்தி!

கொல்லும் விழியும், கோணல் கொண்டையும்,
பூண்ட அந்தப் பொற்றொடி இவளிடம்

'ஏண்டி! தினைக்கென ஏகுதல் வேண்டாம்!
இன்றைப் பொழுதை இதனால் கழித்தால்,
பின்றைப் பொழுதில் பிழைப்ப தெங்ஙன்?
அங்கொரு வீட்டிற் கோராள் வேண்டும்,
தங்கக் குணத்தைத் தாங்கிய வர்கள்!

காலை எழுந்து குறட்டைப் பெருக்கி, 130
வேலை முடித்திட வேண்டும்! அதற்குத்
தக்க வாறொரு தெரிவை தேவை!
அக்கம் பக்கத் தலைந்து கொணர்கென,
என்னிடம் கூறினர்; இடிந்த வாழ்வில்
கன்னி யுழல்வதேன்! கழறுக ஒப்புதல்!
என்று கூறிய இன்மொழிக் கொப்பிச்,
சென்றாள் அவளொடு;

சிறியோள் அவளோ,
கொண்டு சேர்த்ததோர் கொழுமனைக் குள்ளே
உண்ட கள்ளின் ஒழுகு வாயொடு
நின்றிருந் தானே நெடுவான் கருப்பன்; 140

'தென்றல் வீசிடும், தேனுண வுண்போம்!
கொழுஞ்சுவை சோற்றுக் குவியலைக் காண்போம்;
இழிநிலை எய்தா' தென்றெலாம் நினைத்த
கன்னியின் நெஞ்சில், கடும்புயல் வீசச்
செந்நீர் வடித்தனள்! சேயிழை தன்னை,
அடக்கி யணைத்தே அருங்கற் பென்னும்
கிடைக்காப் பேற்றைக் கிள்ளி யெடுத்தான்;

துள்ளினாள்; துடித்தாள்; துவண்டாள்; தொடர்ந்த
வெள்ளத் தாழ்ந்து வழிதடு மாறி
உயங்கினாள்; மயங்கினாள்; உலுத்தன் பலமுறை 150
முயங்கினான்; அவளோ மூச்சடைந் திருந்தாள்.
மாலைப் பொழுதவள் மயக்கம் தெளிந்தது!

காலை நடந்த காட்சி அவளது
நெஞ்சில் நிலைத்தது! நீர்வடித் தழுதாள்!
'வஞ்சிக் கொடியே! அஞ்சா தே'என,
கொடுமை மனத்தவன் கொணர்ந்த பணத்தை
எடுத்துக் கொடுத்தான்;

ஏந்திழை ஏதோ
எண்ணிய வாறதை ஏந்தி இடிந்த
உள்ளத் தோடே ஓடினாள்; குடிலில்
அள்ளித் தெளித்த அவலங் கண்டாள்! 160

அருமைத் தமக்கை ஆவி துறந்தாள்!
வறுமை, வாழ்வின் வழியை அடைத்ததே!

அன்று முதலாய் அக்குடும் பத்தினர்
சென்று சேர்ந்தனர் சாவின் உச்சிக்கே!'

என்று முடித்த கொடுங்கதை கேட்டு,
நின்றழு திருந்தாள் நீள்விழி! உடனே
'அம்மா! அந்த ஆயிழை யா''ரென்றாள்!

செம்மா துளங்கனி சிவந்த உதட்டின்
மருக்கொழுந் தெழுந்து, 'மன்னும் வாழ்வில்
உருக்குலைந் தவளே உன்முன் நிற்பவள்!' 170

என்று கூறிட, இடிந்த நெஞ்சொடு,
வள்ளி கூறுவாள்; வன்மனம் கொண்ட
கருப்பன் தன்னைக் கொன்று குவித்திட
மருப்புத் தோள்புனை மறவன் எவனும்
உண்டோ இல்லையோ ஊரினில் ?' என்றிடத்
'திண்டோள் பலவுள! தீயவன் தன்னை
ஒழித்துக் கட்டிட உறுமுவோர் தம்மை
அழித்திடு கின்றான்; ஆலம் விழுதுபோல்
தொங்கிய உயிர்களின் தொகைபல வாகும்!
பொங்கும் புனலுட் போனவர் கணக்கிலர்; 180
ஊரின் மன்றமும் உலுத்தன் கொடுமையைத்
தேர்ந்ததே! எனினும் தெளிவா யவனெனக்
காட்டும் ஒருவரைக் காணு ததனால்
வாட்ட மடைந்தது! மற்றவன் தன்மேல்
பழியார் சொல்லினும் பறிப்பான் அவருயிர்!
வழியார் வகுப்பார்! வஞ்சித் தேயவன்
கொழுப்பை யடக்கிடக் கொதிப்பார் எல்லாம்
சலிப்புறுகின்றார்! சாதிப் பவர்யார் ?
என்று கூறி;

ஏந்திழாய்! நேற்று
மன்றம் நடத்திய மாண்ட கண்ணையன் 190
வழக்கை யறிவையோ?' வென்றிட, வள்ளி
'வழக்கா, யார்மேல்? வஞ்சகன் தன்னைக்
கொன்ற கொடியனைக் கண்டுகொண் டாரா?
நன்று நன்றெ'ன நவிலவே, 'வள்ளி!
கருப்பன் சிங்கனைக் காட்டிக் கொடுத்தான்!'
என்று மருக்கொழுந் தியம்பினள்;

'என்ன
சிங்கனு கொன்றவர்... ? சிறுமதி யாளன்
என்கண் தனக்கோ இழைத்தனன் கொடுமை !
ஐயகோ! கொடுமை யகற்றி என்னுயிர்

உய்ய உழைத்திட ஒருவரு மிலரே! 200
'கொண்டுவா, என்று கூறிடில் உடலைத்
துண்டுசெய் தீயும் தோள்மறவர் நாடே!
'கட்டிவா' வென்று கழறிடில் தலையை
வெட்டி வருகின்ற வீரமலி நாடே!
கோழையா யினையோ! கோழையா யினையோ!

வாழைக் குருத்தொடிந்து வீழ்ந்தாலும் தாங்காத
சூம்பற்ருேள் பெற்ற மக்களையேன் பெற்றெடுத்தாய்?

தாம்பெற்ற பிள்ளை தானைக்கு முன்சென்று
செத்தொழிந்து மாண்டுவிடின் சினைத்த அவள்வயிற்றுக்
குத்தல் மாயுமெனக் கொள்ளும் வீரமுள்ள 210
பெண்டிரைப் பெற்றெடுத்த பெருநாடே மாய்ந்தாயோ?

செண்டு மலர்பட்டுச் சிதைந்து நொறுங்கிடும்
தோளைப் படைத்தவரைத் தோற்றுவித் தனையோ!

காளைக் கொம்பலைத்த காளை யொருவற்கே
ஆரப் பூமாலை அணிந்தனை வாரென்ற
வீரப் பெண்டிரெலாம் வீணுகப் போனுரோ?

பொருள்கண்டு, மறங்கண்டு, போற்றும் பொன்னுடே!
இருள்கண்டு, மருள்வோரை எற்றுக்குப் பெற்றெடுத்
[தாய்?

பெண்ணைக் காத்துவரும் பேர்பெற்ற நாடே,உன்
முன்னைப் புகழெங்கே? முன்கை வா ளெங்கே? 220

'ஐயகோ'! இந்நாட் டொழுங்கை யார்வந்தே
உய்விக்கப் போகின்ருர்! உறங்குந் தமிழ்நாடே!'
என்று பலவா றியம்பிப் புலம்பிட,

நின்ற மருக்கொழுந்து 'ஏன்வஃளி! இவ்வா
றழுது புலம்பிடின் ஆகுவ தாகுமோ?
உழுது பலங்காணு வொருவன் நிலந்தன்னைப்
பழுதா மென்றியம்பல் போலப் பிதற்றுகின்ருய்!

எழுதுங் கோலெல்லாம் ஈட்டி முனையானால்,
ஒருநொடியில் அன்னாரை ஒழித்துக் கட்டியபின்
மறுநொடியில் இந்நாடு மலரவழி செய்திடலாம்! 230
'வாவா! சிங்கன் வழிபார்த் திருப்பான்!
வா!வா! நமக்கொரு வகைசெய் திடலாம்!'
என்று மருக்கொழுந் தியம்பிட, வள்ளி,
'என்றமிழ்ச் சிங்கன் எங்குளர் அம்மா?
இயம்புவீ' ரென்றாள்; 'என்வீ டொன்றில்,
காக்க வைத்துளேன்; கடிதில் புறப்படு;
ஏக்கத் தோடவன் இருப்பான்' என்றிடப்
பெரியவர் தம்மைப் பற்றி யுரைத்தாள்;

'அருங்கொடிப் பெண்ணே! அவர்வரு முன்னர்
சிங்கனை அழைத்துத் திரும்புவோம்' என்றாள்! 240
பொங்கும் நெஞ்சொடும், புதைந்த நினைவொடும்,
ஓலைக் கதவினைச் சார்த்திச்
சாலை நெடுவழிச் சேர்ந்தனர் மறைந்தே!



# இயல் : 18

ஒப்பதும் மிக்கதும் ஒருங்கின் றியதாய்த்
தொன்மை அடையினும் தேய்வடை யாது
மென்மை ஒலிமிக விரவிய தமிழே,
வாழுதி நன்றே!

மறைந்த பின்போய் மறைந்தது சிலநொடி!
விரைந்த நினைவொடு வந்தனன் சிங்கன்!
குடிலில் அமைதி குடிகொண் டிருந்ததே!

அடிமே லடிவைத் தங்கணும் இங்கணும்
நடந்தான்! ஒருவரின் நாட்டமும் அற்றிட
இடந்தான் வேறே என்று மயங்கி
கொல்லையின் மல்லிகை குவிந்து கிடந்ததும்,
முல்லையின் மணமவன் மூக்குள் நுழைந்ததும்,
அறிந்து தேறி, அவ்விட மென்றே
தெரிந்து தெளிந்தவன் தீய்க்கும் வெய்யிலில் 10
கொழுவிய நிழலைக் கொட்டிய கொல்லையைத்
தழுவிய மலர்க்கொடி தண்ணிழல் அடைந்தான்!

வெந்த நெஞ்சுக்கு வேண்டிய மகிழ்வைத்
தந்து மகிழ்வூட்டும் தமிழ்நூற் றிறம்போல்
இருந்தது அந்நிழல்! எழலாம் என்றே
இருந்த எண்ணமும் இறந்தது! தென்றல்
அளித்த, மகிழ்வால் அயர்ந்த உள்ளமும்
களைத்த உடலும் களிப்பால் நிறைந்தன!
இந்நிலைக் கிடையில் எழுந்த தொருவினா!

ஊற்றும் புனலின் உட்புகுந் தெழுந்து 20
நாற்றம் நிறைமலர் நல்லிதழ் சிவந்து
மல்லிகை முல்லை மருவி, மணமதை

வழங்கு தென்றலா,

வருகென விளம்பி, வாலெயி றீந்து
மருகிடை தந்து மாறு தன்பொடு,
குணநல நாடிக் குற்றந் தவிர்க்கும்,
மணநல அணங்கா,

அறிவோ டடங்கி அடக்கம் பூண்டதை,
விரிவா யுணரத் துறைபல நுழைந்தே
உன்னி உன்னி உணர்ந்துணர்ந் தறிய 30
மகிழ்தரு தமிழா,

ஏற்றம் ஏதென எழுந்த கேள்விக்
காற்றிய தவனுளம்; அதனைக் கேட்போம்:

அணைந்த தென்றலை அணையும் பொருள்தான்
புனைந்த தன்மையைப் பொறுத்த ததன்மணம்;
தண்புனல் தழுவிடில் மிடிதரும் தென்றல்!
நொடிப்பொருள் தழுவிடில் மிடிதரும் தென்றல்!

பணநலம் விரவின் பணிவொடும் மிக்க
குணநலம் கொள்ளின் மணநலம் நன்றும்!

அறிவுடை யாரும் ஆர்ந்திடின் மகிழ்வர்; 40
அறிவில் லாரும் அறிந்திடில் தெளிவர்
பேதையும் கற்கின் பெருமகிழ் வெய்தும்!

வாதைப் பொழுதினும் தமிழ்நூல் இன்பம்,
எப்பொருள் தனிலும் அடையவொண் ணுதே!

செந்தமிழ் இன்பஞ் சொல்லுங் காலை,
ஐந்துபொறிகளும் அமைவோ டொன்ற
ஏற்கு மின்பமே இயலிசை நாடகம்!
ஒப்பதும் மிக்கதும் ஒருங்கின் றியதாய்த்
தொன்மை அடையினும் தேய்வடை யாது,

மென்மை ஒலிமிக விரவிய தமிழே! 50
வாழுதி, நன்றே! வாழுதி'

என்றே
கொண்ட மகிழ்வொடு கொடுங்கண் மூடி,
அயர்ந்தனன்; சிலநொடி அகன்ற பின்னர்ப்
பெரியவர் வந்து 'பேதைப் பெண்ணே
அறிவி யாமல் அகன்றனள் எங்கோ ?
எங்கே போயினள்?, எனநினைந் தவராய்
அங்கவன் துயின்ற அழகினைக் கண்டே
உள்ளத் தேயோர் உணர்வு பொங்கிட
'வள்ளி தனக்கு வாய்த்தவன் இவனே!'
வெனமயங் கியவராய் விதிர்ப்புற வெழுப்பத் 60
துயின்ற சிங்கன் துயிலா நினைவை
அயின்ற இருங்கொடி அணிக்கைப் பட்டதாய்த்
துள்ளிக் குதித்தவன் தளிர்க்கொடிப் பெயரை,
'வள்ளி' என்றே வாய்தரக் கிழவர்
நெஞ்சு மகிழ்ந்த நெறிகாட் டாதே
'அஞ்சல் தம்பி! அவள்யார் ?' என்றார்!

வந்த தென்றற்கு வணங்கிய நாணலாய்
நின்ற சிங்கன் நாணினன் ! கிழவர்
'தம்பி நானுன்னைத் தெரிந்திருக் கின்றேன்!
கொம்பில் தொங்கிய கொழுங்கனி கவர்ந்த 70
கள்ளன் நீயா ? கழறுக' வென்றிடக்
'கள்ளன் நானிலே!' என்றவன் தொடர்ந்து,
மற்றவர்க் காயின ஒருபொருள் கவர்ந்து
நிற்றல் தவறு ! நெடும்புனல் வையத்
தெங்கெனும் ஏற்புடை இருபா லவரும்
தங்களுள் கலத்தல் தகாதென் றறைபவர்
அறிவில் லாதவர் ! அழகோ டழகும்
அறிவோ டறிவும் அணுகில் இன்பம் !''
என்று பலவா றியம்பிடக் கிழவர்,
'நன்'றெனக் கூறி நகைத்துத் 'தம்பீ, 80
உன்னூ ரேதென் றுரை'யெனத்
தன்னூர் 'வரிப்புறம்' என்றே இயம்பினன்!

(வேறு)

இதைச்சொல்லக் கிழவர் நெஞ்சம்
இழந்ததைக் கண்டார் போல,
'எதைச் சொன்னாய் தம்பி!' என்றே
இயம்பிட, சிங்கன் மேலும்
'பதைத்திட லேனோ? முன்னைப்
பஞ்சம்வந் தப்பே ரூரைச்
சிதைத்தவ் வரிப்பு றத்தைச்
சொல்கின்றேன்' என்று சொன்னான்! 1

'என்னூரும் வரிப்பு றந்தான்;
இயம்பிடு மேலே தம்பி!
இந்நாளாய்க் கேளா தப்பேர்!
இன்றேநான் கேட்டேன்' என்றார்!
எந்நாளும் காணா தொன்றை
இன்றவன் கண்டாற் போல
முன்னாளில் மறைந்து போன
முகங்களை நினைத்துச் சொல்வான்! 2

'பதினான்கு வயதுப் பையன்,
படிவம்போ லெனக்கோ ரக்காள்!
மிதியடி தேய்ந்தாற் போல,
மெலிந்த வோரன்னை! துன்பப்
பொதிமிகு வாழ்வை ஓட்டிப்
போனாரென் றந்தை! வாழக்
கதியிலை! அக்காள் தன்னின்!
கைதொட்டான் ஒருவன் வந்தே! 3

தொட்டவன் நோயால் வாழ்வைத்
துறந்தானோ ராண்டிற் குள்ளே
கட்டிய நினைவிற் காகக்
கையிலோர் பெண்கு ழந்தை!

நெட்டிய வறுமை யோடு
நேர்ந்ததோர் பஞ்சம்! ஐயா
மட்டிலாத் துன்பம் மீற
மாய்ந்தனர் மக்கள் எல்லாம்! 4

மழையில்லை; பயிர்க ளெல்லாம்,
மடிந்தன; மரங்கள் தோறும்
தழையில்லை; ஏரி காய்ந்து,
வெடித்தது; தண்ணீர் ஓடும்
புழையெல்லாம் தூர்ந்து போகப்
புதுப்புனல் தன்னைக் கண்டு,
பழம்நிலை எய்தும் நாளைப்
பார்த்தனர் பழனர் எல்லாம்! 5



# இயல்: 19

வெஞ்சுரம் விளைத்த வேர்க்கிழங் கெடுத்துப்
பிஞ்சுப் புளியொடு பிதக்கி யுண்டனர்!

எல்லா வுயிர்களும் ஏறிய பஞ்சத்
தில்லாக் கொடுமைக ளேற்றன;

நன்றாய்ப்
பேணல் மறந்த *பெதும்பரைத் துறந்து
கோணற் கொம்பினைக் கொண்ட ஆடுகள்
கானல் நோக்கிக் கடுகி யேமாந்து,
கூனல் நடையொடு கொள்விடாய் கொல்ல.
வற்றிய கள்ளியின் வாய்த்த சிறுநிழல்
பற்றுவ அவற்றைப் பார்த்த குட்டிகள்,
புனல் காணுது புன்முலை யுண்ணற்கு
நுணங்கு காலொடு துள்ளி வரும்வழிச் 10
சிறுமழை யின்றி வெறுநிலங் கொண்ட
பெருவெடிப் புள்ளே சிறுகால் புக்கப்
பொடிவா யரற்றும் புன்னிலை ஒருபுறம்!

பேச்சடங்கி வாயின் பிதற்றல் அடங்கி,
மூச்சடங்கிப் போனவர்க்கு மூட்டியதீ நன்றடங்கிச்
சாம்பராய்ப் போன சுடுகாடு போற் புனலோ,
வற்றிடவும் செங்கதிர் வாட்டிடவும் நின்றமணல்
ஒற்றிய காலை யுறுத்திடப் பசுங்கன்று
இலைநிழல் காணு தலைந்தே யிறுதியில்
வளையா வொருபனை வாய்த்த சிறுநிழல் 20
அண்டிடக் காய்ந்தே ஆடிய ஓலைபால்
மண்டிய பேரொலி மாய்த்திட வெகுண்டு,
‘அம்மா’ வென்றம் மாவினைத் தேடும்.

---

*பொதும்பர்—இடையர்

வெம்மைகொள் காட்சி வேறொரு புறம்மிகும்!

மாக்களிவ் வாறாய் மடிந்திட மக்களும்
தாக்கிய பசிக்குத் தந்தனர் உயிரை!

குழிந்த வயிறொடும் கூனிய முதுகொடும்,
வழிந்த நீரொடும், வளமில் கண்ணொடும்,
குரங்குக் குட்டியாய்க் கவ்விய மக்களைத்
தூக்கிய வாறும், துவண்ட வாறும், 30
தளர்ந்த நடையொடும் தாக்கும் பசியொடும்,
உலர்ந்த நாவொடும், உறுத்துங் காலொடும்
கூட்டங் கூட்டமாய்க் கலைந்து சென்றனர்!

வாட்டிய பசிக்கு வளர்ந்து நின்ற
நாக தாளிப் பழத்தினை யுண்டு,
தாகந் தணித்திடத் தண்புன லின்றிக்
கனல்தெறு மாற்றின் கொதிமணல் பன்முழம்
கல்லிநீர் கண்ட களிமே லோங்கிட
அள்ளிக் குடித்த அகமகிழ் வோடு
நிறையும் மக்கள் ஒருபுறம் நிறைய 40
இரையும் புளிமர இலைதின் பாரும்,
வெஞ்சுரம் விளைத்த வேர்க்கிழங் கெடுத்துப்
பிஞ்சுப் புளியொடு பிதக்கியுண் பாரும்,

குப்பைக் கீரையைக் கொடுங்கனல் மூட்டி
வதக்கியுண் பாரும், ஒருபுறம் நிறைய,
மாண்டனர் பசியால் மக்கள் ஒருபுறம்!

மூண்ட பஞ்சம் மீளா முன்னர்ப்
பலபல முறையிற் பணத்தைச் சேர்த்தவர்
இலமில மென்றே இரப்பார்க் கெல்லாம்,
இலைஇலை யென்றே யிடித்துக் கூறினர்! 50

விளைவிலை யென்றே விண்ணை நோக்கினர்
உழவர்கள் எல்லாம்! ஒருமுறை யுண்ணல்
பெருமை என்று பேசப் பட்டது!

குழவிகள் தம்மைக் கொஞ்சிட மறந்தனர்!
விழையுங் குழவிகள் வெறுந்தோல் சுவைத்தே
அலைவதைக் கண்ட அன்னைமா ரெல்லாம்
ஆவினந் தந்த அரையுழக் குப்பால்
நாவை நனைக்கவும் போதா தாகிட
அழுகுரல் கேட்டே அழுதனர் வருந்தி!

இல்லார்க் குதவிடு மெண்ணத் துதித்த 60
நல்லார் நிறுவிய நல்லறச் சாலைகள்
மூடப் பட்டன! மூண்ட வறுமையால்
நோயும் பஞ்சமும் நுழைந்தது நாட்டில்!

'சாத்திரம்' நம்பிய சழக்கர் கடவுளை
ஏத்தித், தொழுதனர்; இதனுல் வந்த
வரும்படி குருக்களின் வயிற்றுட் புகுந்தது!

பெரும்படி யான மக்கள் 'நாத்திகம்'
பேசி வந்ததாற் பஞ்சமேற் பட்டதென்
றேசி வந்தனர் ஏய்த்த ஒருசிலர்,

மழைவரச் செய்ய மாதவஞ் செய்தனர்! 70
சிலைசிலை யான சிறுமக வெல்லாம்
பாலுக் கேங்கிய படியா யிறந்திட
வேளைக் கறுபது படிப்பால் சாக்கடை
நீரிற் கலந்து நெய்யெரி புகுந்ததே!

ஊரின் மக்கள் உறுதி குலைந்தது!
பலநாட் சென்றும் பசும்புல் தோன்றும்
நிலையிலை என்றே நினைத்த மக்களும்,
பெற்ருேர் விட்டவர் பிள்ளைகள் விட்டும்,
சுற்றம் விட்டுஞ் சென்று பிரிந்தனர்!

எங்கோ சென்றனர்; இருக்கும் உயிரைத் 80
தங்கச் செய்திடத் தவித்தனர்! என்றன்
குடும்பமும் வாடிக் குலைந்ததே!

ஐய,

இடும்பை தாளா அன்னையும் எந்தையும்
வாடி வதங்கினர்; வண்ணப் பாவைபோல்
தேடிக் கிடைத்த தளிர்மக வொன்றை
ஏந்திய வாறே இடுக்கண் ணேந்திய
ஆம்பற் கொடியென் அக்கையும் யானும்,
பெற்றவர் தம்மைப் பிரிந்தவர் பாலே,
பொற்றொடி மகவைப் பேணத் தந்தே
ஓரிரு நாட்களில் ஊர்வரு வோமென் 90
றீரிரு நாட்கள் இருவரும் பலவா
றலைந்து திரிந்தே அயர்வுறும்
நிலையில் சேர்ந்தோம் நீடூர் வயலே!



# இயல்: 20

வெங்கண் உலகில் விளையும் தீமையால்
பொங்கிய வானம் பொழிந்ததே ஒருநாள்

வயல்வெளி காய்ந்த தாலே,
வறுமையாற் காய்ந்தோர் எல்லாம்
நயந்தொரு வேலை ஏற்க
நலிவினை யெடுத்துக் கூறி
அயர்வொடு வருந்தி நின்றார்;
அடிப்படை உழவு மாய,
துயர்வுற்றார் அதனைக் கொண்டு
தொழில்செயும் மாந்த ரெல்லாம்! 1

அக்காலும் யானு மாக
அணுகாத பேர்க ளில்லை;
புக்கிலா வீடொன் றில்லை;
போய்க்கேளாச் செல்வ ரில்லை;
எக்காலத் தும்அப் பஞ்சம்
போலில்லை, ஐய! நாங்கள்
நெக்கிநெஞ் சுருகி நின்றோம்
நிலையிலா வாழ்வு தன்னால்! 2

உறிஞ்சுபால் உறிஞ்சும் மென்வாய்!
உடலினைத் தடவும் ஓர்கை!
குறிஞ்சியின் பண்ணைப் பாடிக்
குழவியை அயரப் பண்ணும்
நறுந்தாய்மை நிலைமா றாத
நங்கையின் உள்ளம் வந்தே
உறுத்திடும் அதற்குள் சூழ்ந்த
வறுமைவந் ததனை மாய்க்கும்! 3

ஒருநாளுக் குணவு கிட்டும்!
ஒருநாளுக் கதனைப் பாரோம்!
பெருநாட்கள் எம்மை வந்து
பசியுண்ணும்! இவ்வா ருக,
ஒருநாளில் வழக்கம் போல
உணவிரந் தொருவீட் டண்டை
இருவரும் சென்று நின்றோம்;
எதிர்நின்றுன் ஒருவன் வந்து! 4

பெரும்பணக் காரன் போலத்
தோன்றினன்! எம்மைக் கண்டு,
வரும்புனல் தாவும் மீன்போல்,
வல்லூறு போலத் தாவி,
பெருமகிழ் வெய்து வான்போல்
பின்னின்ற தமக்கை தன்னை,
அரும்பிய நகையைக் காட்டி,
அணுகிப்பின் னிதனைச் சொன்னுன்:- 5

'பைங்கிளிக் குஞ்சு மாய்க்கும்,
பனியினுல் நடுங்கல் போல,
நங்கைநீ நடுங்க லேனே?
நல்லுடல் இளமை தன்னைத்
தங்கிய வறுமை மாய்க்கத்
தளர்நடை பூண லேனே?
இங்குநீ தங்கி வீட்டின்
எழிலினை மேற்பார்' என்றுன்! 6

தமக்கையென் விருப்பங் கேட்டாள்!
தங்காத உயிரைக் காக்க,
எமக்கொரு வாய்ப்பென் றெண்ணி
இருவரும் ஒப்பி நின்றோம்!

தமக்கைஇல் வேலை செய்வாள்;
எடுபிடி எல்லாம் நானே!
'எமக்கொரு குறைவு மில்லை,'
என்றிருந் தோமே! ஐயா! 7

(வேறு)

சென்று சேர்ந்த முதல்நாளி லெம்மைக்
கன்று பேணிடும் கறவை எனும்படி
நன்று பேணினன்; நனியுடை தந்து
இன்சுவை உணவை ஈந்துகாத் தனனே! 8

வெம்பசி யுலைத்தலை விலக்கினன்; விலக்கிட
வெம்பகை நீங்கிய விறல்வேந் துவகையி
னும்பல் வகையா லுவந்து நின்றனம்!
எம்பல சுற்றமும் இயங்கிலை மனத்தே! 9

பாலையின் நடந்துளப் பாடு நீக்கிடுஞ்
சோலையின் தண்ணிழல் அண்டிய உயிரினும்
ஆலையின் பஞ்சென வலைந்துலைந் தவர்க்கே
*ஓலையின் மலர்மலி ஓடை போன்றனன்! 10

குன்று கலைந்திடக் கொழுஞ்சுவைப் பழமுதிர்ந்
தொன்று பெருமலை யொதுங்கினர் போல்கவே,
இன்றுள வாகியும் இனியுள வாகியும்,
என்றுள வாகிடு மின்பொருள் கண்டனம்! 11

---

*ஓலையின்மலர்—தாழம்பூ

சின்னாள் சென்றிடச் சினைத்த வயிறுதாங்
கன்னா ளீன்றிய அரும்பெறற் பேறங்
கென்னா மிடருறு மென்றவள் எண்ணியே
அன்னான் பாலென தக்கை யுணர்த்தினள்! 12

அள்ளித் தெளித்திடு மழகொளி மண்டிய
வெள்ளி நிலாவை இருண்முகில் விடுத்தல்போல்
கொள்ளை யழகினைக் கொள்ளிடுக் கண்விடக்
கிள்ளை யழகினை விஞ்சினள் தமக்கையே! 13

தழுவி மாய்த்திடுங் கான்கர டியினைத்
தழுவிய நெஞ்சின் தருக்கன் போலெமை
அழுவ தேனென் றடக்கிய தீயவன்
தழுவிட முனைந்தான் தமக்கையைப் பலகால்! 14

எங்குச் செல்லினும் எவர்பாற் செல்லினும்
தங்கிய வறுமையைத் தாங்கிய வர்க்கெலாம்
வெங்கண் உலகில் விளையுந் தீமையால்
பொங்கிய வானம் பொழிந்ததே ஒருநாள்! 15

என்றுமில் லாமலன் றெய்திய மழையால்
குன்றுங் கரைதல்போற் கொடுநீர் பாய்ந்திடக்
குன்றிய வளனைக் கூட்டிடு முழவர்க்
கொன்றிய மகிழ்விற் கிணையிலை ஐய! 16

(வேறு)

அன்றிர வனைவ ரும்போய்
அடங்கிய பின்னை அன்னான்
சென்றென தக்கைப் பாலாய்ச்
செருக்கினைக் காட்டி விட்டான்
என்றுநா னெண்ணு கின்றேன்;
இரவுபோய் மறுநாட்காலை
சென்றுநா னவளைக் காணு
திடியுண்டான் போன்றி ருந்தேன்! 17

ஏழையாய்ப் பிறந்தோ ரெல்லாம்
இடரின்றி வாழ்தற் கில்லே!
ஏழையாய்ப் பிறந்தோர்க் கெல்லாம்
இடர்தராச் செல்வ ரில்லே
வாழையா யெண்ணி யீனும்
அருங்கனி பெற்றுப் பின்னேப்
பீழைசெய் உலகு செய்யும்
பிழையினே யொறுத்தல் யாரோ! 18

அன்னவள் சென்ற பின்னே
அவனெனக் கனலாய் நின்முன்
புன்னேயின் கிளியி னேப்போய்ப்
புலந்தொறும் தேடித் தேடி
என்னேயும் பயனென் றில்லா
தென்னுள 'மிடிந்து, காக்க
மன்னிடும் படையில் சேர்ந்து
மண்ணுல குய்ய நின்றேன் 19

இருபதி ணண்டிந் நாட்டின்
இராணுவத் துழைத்தே னய்ய!
பெருமதிப் பாளர் கூறும்
பேரறி வேற்று மக்கள்
கருமதி போக்க வெண்ணுங்
கழகமோ டமர்ந்து வாழ,
ஒருமதி கொண்டிவ் வூர்வந்
தொருதிங் ளான தென்முன்! 20



# இயல் : 21

இத்தரை பணத்தைப் பெற்ருேர் ஏற்றத்துக் காகும்! ஏழை
செத்தழிந் தாகவேண்டும் என்பதை உணர்வா யென்ருர்!

என்றவன் இதுவரை யுரைத்தது கேட்டவர்
மென்றளி ருடலம் மெய்சிலிர்த் திடவும்
'என்று காணுவம்' என்றிருந் திருந்தே,
அன்று கண்டவர் போல்மிக வுவந்தே, 1

பொங்கிய மகிழ்விற் புதைந்தவர், நின்ற
சிங்கனின் செருத்தோள் சென்று நோக்கியே
'சிங்கா சிறுபரு வத்தே யாக்கிளை
தங்கிட வேற்ற தழும்பீ' தென்றனர்! 2

'அப்பா நீயென தருமை மகனே,
எப்பா லிருந்தனை யிதுநாள் வரை'யெனச்
செப்பா முன்னர்ச் சிங்கனுந் தாவியே
'அப்பா! அப்பா! வென்றணைந் தனனே! 3

இன்னுள் வரையிலா தின்பச் சூழல்
தன்னுல் நிறைந்த தக்குடில்! இருவரும்
இன்னே சின்னெடி இணைந்திருந் திடவப்
பொன்னேர் மேனியன் புகன்றிடு கின்ருன்; 4

'முந்தையி விருந்தநம் மூதூர் விட்டென்
தந்தையே இவ்வூர் தான்புகுந் திடவென்
வந்தது? வாய்த்த அரும்பெற லன்னையென்
சிந்தை யுணர்ந்த சீரெங் கேயோ? 5

உளங்குளி ரெய்த உரைசெய் தமக்கையின்
துளங்கும் வாழ்வின் சுடரெங் கேயோ?
வளங்கவிழ்ந் தேற்ற வறுமை நொறுக்கிய
விளங்கொளி வாழ்வின் வித்தெங் கேயோ? 6

உரைசெய் வீரே! உரைசெய் வீரே!
கரையிற் கடும்புன லலையென வுள்ளம்
உரைசெய் முன்னம் உலைதலை நிறுத்த
உரைசெய் வீரே! உரைசெய் வீரே! 7

(வேறு)

கேட்டவன் தன்னை நோக்கிக்
கூறுவார்; 'தம்பி! நம்மை
வாட்டிய பஞ்சம் நீங்க
வந்தது மழையும்! அந்நாள்
கூட்டமாய்க் கூடி ஆற்றில்
குதித்தெழு வெள்ளம் காண
வேட்டனர் உழவர்; எல்லாம்
விரைந்தனர்; விரைந்தேன் யானும்! 8

புதுப்புனல் விரைவில் யாரோ
புரண்டனர் என்று கண்டு
குதித்தனன் ஒருவன்! பின்னைக்
கொண்டுவந் தானே, ஐயோ,
நொதித்த வோர்பிணத்தை! ஓடி
நோக்கிட இடிந்து போனேன்!
பதித்தொரு படிவம் போலென்
பைங்கிளி கிடந்த தய்யோ! 9

அன்னவள் நிலையைக் கண்டுன்
அன்னையும் சின்னாள் சென்றே
அன்னவள் பின்ன டந்தாள்!
அழகொளிர் மகவை யேந்தி

புன்னிலைப் பதியை விட்டுப்
 புறப்பட்டிப் பதிக்கு வந்தே
என்னிலை கடத்தி வந்தேன்!
 எதிர்ப் பட்டாய் இறக்குமுன்,நீ! 10

அத்தளிர்க் கொடிதான் உன்றன்
 அகத்தினை வாங்கினாள்; நான்,
செத்தொழி வதற்குள் உம்மைச்
 சேர்த்திட்டேன் ஒன்றாய்! நீர்சூழ்
இத்தரை பணத்தைப் பெற்றோர்
 ஏற்றத்துக் காகும்! ஏழை
செத்தழிந் தாக வேண்டும்
 என்பதை யுணர்வா' யென்றார்! 11

அக்கொடி யெங்கே என்று
 வினவிடக், கருப்பன் என்னும்
மிக்கொடி யானைப் பற்றி
 முதியவர் உரைத்து விட்டு,
தக்கநே ரத்தி லில்லா
 தெங்கிவள் சென்றாள் என்று
துக்கமுற் றாரே! அந்தத்
 துயரத்தி லெழுந்தான் சிங்கன்! 12

(வேறு)

'துன்பத் தூறல் அடங்கியும் என்றன்
இன்பத் தேறல் எங்கா கிலும், இடர்
பின்பும் ஏறிப் புலம்பு முளத்தொடு
துன்பத் துழலுமோ' என்றனன் சிங்கன்; 13

'யாவையி னுக்கும் யான்போய் அழகொளிப்
பாவையள் தன்னைப் பார்த்துமீள் கின்றேன்;
பூவையள் தன்னைப் பேணிய வாறு
காவல் செய்தலென் கடமையன் றே'வென்(று) *14*

அன்னவ னுரைக்க அருஞ்சுமை நீங்கித்
தன்னுரி மையினைத் தாங்கிய கிழவர்
என்ன வாயினும் இயம்புக; இனியவள்
உன்னவள், நீயவட் குரியவன்' என்றார்! *15*

இம்மொழி கேட்டவன் எழுந்(து),இரு செவிகளை
அம்மொழி பேசியே அணிசெய் பவளை
எம்முறை யாகிலும் காணுமென் றேகிட
நிம்மதி யோடே பெரியவ ருவந்தார்! *16*



# இயல்: 22

ஒன்ருல் நீயழிந் தொழிந்திட வேண்டும்!
அன்ருல் என்னுயிர் அழிந்திட வேண்டும்!

உவந்த வுளத்தே உறுங்கொடிக் கோவையின்
சிவந்த பழத்தினைச் செவ்விதழ் என்னும்
மருக்கொழுந் தோடு, மாக்கொழுந் தெழில்சேர்
உருக்கொழுந் துடலின் ஒண்டொடிப் பாவை,
பெண்மான் பின்ஞெரு பொன்மான் போலாய்,
பண்பா டிருங்குயில் பழகுந் தனிவழித்
தொடர்ந்து சென்ருேர் தொல்குடில் அருகினுள்!

'படர்ந்த தேமலிற் பட்டொளிப் பாவாய்
இக்குடில் தனிலுன் ஏறுளான்; ஏகுக!
தேன்போல் வாயே! தேமலர் செல்லுக!' 10

என்றே மருக்கொழுந் தியம்பிட, வள்ளி
'நன்றே! அம்மா! நான்போ வே'னென்
றிருத்தி யேகிட, ஏகினள் மருக்கொழுந்
தொருபுறம்! இந்த ஒருநொடிக் குப்பின்
வள்ளி சென்றவ் வருங்குடில் நுழைந்தாள்!

காதலே விழைந்த கன்னியுட் சென்றதும்
சூதாற் கதவு சாத்தப் பட்டது!

மாடப் புறவென மடக்கொடி வெகுண்டே,
ஒடப் பார்த்தனள்! உள்ளம் இறுகிய
வேடன் விரைவது போல்விரைந் தோடிப் 20
பிடித்து நிறுத்தினன் பேயன் ஒருவன்!

துடித்த நெஞ்சொடு தோகை நோக்கியே
'அன்றே அணுகிய அறிவில் லாதான்!
குன்றின் உளத்தவன்! கொடுங்கருப் பனெனக்

*கண்டதும் உடலம் கனலாய் நடுங்கினள்!*
*எரிபடத் துடிக்கும் என்பிலி போன்றும்,*
*மருள்பட வடிக்கும் மாவளி தன்னல்*
*நிலேகுலேந் தாடும் நீள்கிளே போன்றும்*
*தலேயிழந் துழலும் தும்பியை யொத்தும்*
*அஞ்சிறை யிழந்த அருங்கிளி போன்றும்* 30
*வெஞ்சிறை புகுத்திய வஞ்சமில் நெஞ்சாய்,*
*நின்றவள் தன்னே நெருங்கினன் கருப்பன்!*

*பொன்றளிர்க் கைகளேப் போர்த்த வாறவள்,*
*கூனிக் குருகிக் கண்ணீர் சாய்ப்ப,*
*'ஏனிவ் வாருய் எழிலுக் கரசியே,*
*அஞ்சிடு கின்ருய்! ஆனவை யாவை?*
*துஞ்சா தென்கண் தோய்ந்தெழிற் பாவாய்!*
*இன்றுனே யடைய வெந்நலஞ் செய்தேன்?*
*குன்றின் கொழுவிலே கொள்ளிள மான்போல்,*
*பூண்ட பொலிவின் பூங்கொடி யோயே!* 40
*தீண்டிய பார்வை தோய்ந்த இன்பத்து,*
*மூழ்கிய இன்பம் முடிவில தாகின்*
*ஆழ்கடல் முத்தெழி லடக்கிய வழகிதழ்*
*என்சுவை யீனும்! இதனினும் குளிருமிழ்*
*கன்னத் தென்சுவை கண்டிடும்! அதனினும்*
*பொன்னுடல் சந்தனப் பலகை போல்கவே.*
*என்சுவை யீனும்! என்சுவை யீனும்!'*

*என்றே பலவா றியம்பிட இருங்குழல்*
*'அணுகேல் என்பால்! அரற்றேல்! முறைபிறழ்ந்*
*தணுகுதி யாயின் அடியொடு சாய்ப்பேன்!* 50
*பண்பின் பாவை போலெனு மாருய்*
*அன்பினேக் காட்டி அக்கொடும் பெண்ணே*
*இங்ஙன் விடுத்தளே! என்செய் தேனே?*
*வெங்கரி காட்டி வேறது பற்றும்*
*அங்குயன் போலெனே அழைத்தன ளேயோ!*

பெண்மைக் கெதிராய்ப் போயின ளேயோ!

தன்னினந் தீய்ந்திடுந் தணல்விற காகிட
என்னுளந் துணிந்தனள்? இனிய புறவாய்
வந்தவள் இறுதியில் வல்லூ றுகினுள்!
எந்தமிழ் மரபிற் கிழுக்கைத் தேடினுள்! 60

நச்சுப் பார்வையில் நங்கையர் கற்பை
எச்சிற் படுத்தும் இடக்கன் தன்னிடம்
மயற்பட வைத்தவள் மாக்கல் இட்டென்
உயிர்நீக் கிடினும் உவந்திறப் பேனே!

புலிவாய்ப் படுத்திய புன்மதிப் பாவை!
நலிசெய் மாறே நானென் செய்தேன்?

எறிபுனல் தள்ளினும் இடரொடு மீள்வேன்!
பொறிநெருப் படையினும் புண்ணொடு மீள்வேன்!
மலைநின் றுருட்டினும் உடலொடு மீள்வேன்!
சிலையம் பெய்யினும் செருக்கோ டிறப்பேன்! 70
கள்வர்கைப் படினும் கற்போ டுய்வேன்;
கொல்வார் கைப்படின் கெடுஞ்செய லேற்பேன்;

அல்லா திக்கொடு மரவத் தாட்பட்
டில்லா தொருபழி ஏற்றிட என்னுயிர்,
என்னைக் கொண்டவன் இன்னுயிர் எந்தமிழ்
மன்னுந் தன்னுயிர் மணித்தமிழ் நாட்டுயிர்
கறைப்படப் பொறியில் கயவனின் பாலெனைச்
சிறைப்பட வைத்தனள் செயலறி நெஞ்சிலள்!'

என்று விக்கிய இளமான் தன்னை,
நின்று நோக்கிடும் நிணமிகு கொடுவரிப் 80
புலிபோல் ஆகினன் புல்லறி வாளன்!

உலைபோல் உயிர்த்தாள்! ஊரறி கள்வன்
பின்வரு மாறெழிற் பேச்சைத் தொடுத்தான்;

'அழகெனுஞ் சொல்லை அமைத்த புலவர்க்

கிலக்காய் நின்றெழில் இயக்கிய உருவே!
வானில் தோய்ந்த ஒளிநிலா போன்றென்
மேனியில் தோய்த்திடு முழுநிலா முகத்தை!

கிளைநின்று நழுவிய கரும்பாம் பன்ன
நிலைநின் றவிழ்ந்த நீள்கருங் கூந்தலை
அள்ளிச் செருகிய அழகென் நெஞ்சில் 90
கொள்ளை ஆசையைக் குவித்தது!

குளத்தில்
எட்டிக் குதித்திடும் இருங்கயல் போலுன்
வட்ட முகத்தின் வால்விழி வீசிய
வெட்டில் என்னுளம் வீழ்ந்தது! வேனிலே!

எழில்மிகும் இதழ்திறந் தின்மொழி பேசுக!
அழிவில் இன்பம் ஆக்குக! அதுவிட்
டிழிசொல் பேசிடில் இன்பம் என்ருற்
பழிச்சொல் பேசுக, பனிவாய் திறந்து!

தீயென வாரித் தெளித்தால் உன்கை,
தோய்த்த சந்தனத் தூறலாய்க் கொள்வேன்! 100

தின்னக் கொடுப்பின் சுண்ணத் துவையலும்,
இன்னலம் பயக்கும்; எழிற்கை கொண்டு,
கள்ளியாற் புடைப்பினும் கடிமலர் என்பேன்!

பொல்லா தெனினும் பூவைநீ விரும்பின்
நல்லன வாகும்!

நானே இங்ஙன்,
தொல்லை தன்னையும் துரும்பாய் எண்ணி,
அல்லன வெல்லாம் அன்போ டேற்றே
உயிரினைப் பொருளா யுன்னு திருந்திடல்
ஏனென நினைக்கின், எனக்குன் பாலாய்,
ஆன அன்பெல்லாம் அரைநொடிக் குள்ளே, 110
விளங்கும்! விளங்கிய வேற்கணுய்!

உன்பால்
களங்கமில் அன்பைக் காட்டுவ தற்கே,
இந்நெடு நாட்களாய் எதிர்பார்த் திருந்தேன்!
அந்நெடு நாட்களும், ஐயகோ! ஒழிந்தவே!

எஞ்சி யுள்ள இனிவரும் நாட்களை
வஞ்சி நீயெனை வரித்திடின் இன்பத்து,
வேனிற் காலமாய் விளைத்திட முடியும்!
ஏனிவ் விழிநிலை?' என்றான்;

இச்சொலோ,
கொடுங்கல் பட்ட கூர்வேல் போன்றும்,
அடுங்கலத் தரற்றிய அறச்செயல் போன்றும், 120
வீணாய்ப் போனது; வீணன் பிதற்றிய
கோணை மொழிக்கவள் கொள்செவி யின்றி,
மேற்பனி மூடிய மாய்க்குங் கடல்தனக்
கேற்ப நிகழ்த்திய திக்கொடும் பேச்சென
எண்ணி வருந்தினள்; இதற்குள் எத்தன்,
கன்னியின் அண்டை கடுகினான்;

அவளோ,
துணுக்கம் எய்தித் துடித்த நெஞ்சாய்,
பணிவோ டிருகை பணித்தினி மேலே
நடந்திடப் போகும் நலிவினை எண்ணிட
உள்ளம் இன்றி, உரையெது மின்றி, 130
வெள்ளம் உகுத்து, வளராக் குழவி,
'வேண்டாம்' எனவெறுந் தலையசைப் பதுபோல்,
நீண்டசைத் தேஅந் நீள்குழல், 'ஐயா,
என்னை ஒருவற் குரிமை யாக்கினேன்;
அன்னை தன்னொடும் அவள்பெற் றெடுத்த
பெண்கள் தம்மொடும் பிறந்திருப் பீரே!
கண்ணுக் கொருவனைக் கருதாது அவர்கள்,
எத்தனை பேர்கட் கிசைந்தனர்?

பெரியீர்!
பித்தரைப் போலப் பிதற்றுவார் எல்லாம்,
பண்டை யொழுங்கினைப் பார்த்திட வேண்டும்! 140
வண்டை யொத்திடும் வன்மனத் தவரே,
பற்பல பெண்டிரைப் புரத்தல் கூடும்!
சிற்சில மகளிர் சீரொடு வாழ்வார்!

உள்ளத் தெழுந்த உண்மை அன்பினைக்
கிள்ளிப் படைத்த கன்னியர் தமக்குப்
பகுத்த அன்பு படர்வதே யல்லால்,
மிகுத்த அன்பு மிளிர்வதே யில்லை!

ஒருளத் தன்பை ஒருத்தியின் பாற்பட்ட,
ஈருளந் தமக்கே இருகூ றுக்கிடின்,
அவனுளத் தன்பின் அத்துணைத் தன்மையும், 150
திகழும் என்பது தெளிவிலாக் கொள்கை!

தாமரை யிலைமேல் தங்கிய நீர்போல்
நாமிருப் பதிலென் நலத்தைக் காண்போம்!'

என்று கூறிய இன்சொல் அறிவிலி
தன்கைக் கிடைத்த தகுநூல் போன்றே,
என்ன பயனும் இல்லா தொழிந்ததே!

'என்னருங் கிளியே! இதுபோல் அறிவை,
இனிவருங் நாட்களில் எனக்குக் கூறத்தான்,
நனிவரு வாயென நான்சொல் கின்றேன்!

அணுகுக! அம்பொன் னணிக்கை நீட்டி 160
அணைவாய்! அம்மலர் அழகுவாய்த் தேனை,
ஊட்டுக! உடலோ டென்னுடல் கூட்டுக!
காட்டுக இன்பக் கடலினை! கவினே!

எழிலே! இன்பத் தேந்தலே! இன்மலர்ப்
பொழிலே! பூவுடற் புணர்ந்த தென்றலே!
சந்தனப் பாவாய்! செந்திரு வெழிலே!

உயிரே! உயர்ந்த ஒருதனிப் புலவன்,
மயர்வற வரைந்த மாவோ வியமே!
அருகுக! என்னுடல் அணைக்க அணைக்'கென

இருகண் மூடி ஏந்திழை எதிர்செல, 170
'ஐயோ!' வென்றே அலறித் துடித்தாள்!
'உய்யே ஞே'வென உயிர்விட வெண்ணி,
ஓடினள் ஓடி ஓங்கிய ஓரிடந்
தேடினள்;

தேடித் தன்முன் தானைச்
சேலையைக் கழுத்திற் சேர்த்துச் சுருக்கிடும்
வேளையில் கருப்பன் விரைந்தக் கொடியினைத்
தாங்கித் தடுத்திடத் தளிர்க்கொடி சினந்தே,
ஓங்கிய யவன்கன்னத் தறையவும், அவ்வறை
வாங்கிய மறுகணம் வயங்கொளிக் கன்னத்தை,
ஏந்திச் செருக்கோ டிதழாற் சுவைக்கஅவள், 180
உதறித் தள்ளி ஒருமருங் கோடி,
பதறித் துடித்திடப் பாய்ந்தனன் அங்கும்!

'அண்டா தேயெனை அடைவேன் என்றுநீ,
கண்ட கனவைக் கடிதின் மறந்திடு!
நெருங்கினை யாயின் நீயழி வாயே!
அருங்கற் புய்த்திட அழிவேன்! அழிவேன்!
ஒன்றால் நீயழிந் தொழிந்திட வேண்டும்!
அன்றால் என்னுயிர் அழிந்திட வேண்டும்;
இன்றிவை அல்லால் என்கற் பழிதலும்,
மன்னி நீயதை வாங்கி மகிழ்தலும், 190
என்றும் நிகழா தென்றும் நிகழாது'!

என்று நிகழ்த்திய ஏறுடைச் சொல்லைக்
கேட்டுச் சிரித்தான்! கிளிமொழி யஞ்சிக்,
'கோட்டுக் கூகையே! கூக்குரல் ஏன்'என,

'கடற்படு முத்தைக் கோத்தியல் வாயாய்!
இடர்ப்படு வேன்நான் எனினும் உன்னை,
இழந்திட ஒவ்வேன்; எனக்குனை யாக்கிட
அழிந்த கண்ணையன் அழியா திருந்தால்,
அவனைக் கொண்டுன் அணிகா தலனை
அழித்திருப் பேனே! அதன்பின் கண்ணையன் 200
ஒழிந்திட வேண்டும், உனைநா னடைய!
இந்த முடிவே என்முடி வாகிட,
வந்த முடிவோ வேறாய்ப் போனது,

பின்னர் இறப்பவன் முன்னர் இறந்தான்!
முன்னர் இறப்பவன் பின்னர் இறப்பான்!
அன்றே வைத்த அக்குறி மாறிக்
கொன்றதே அவனை! குயில் மொழி!இனுங்கேள்:

சிங்கன் இருக்கையில் சிக்கலாய் அன்பினை
எங்ஙன் செலுத்துவ தென்றும் எண்ணலாம்!
அங்ஙன் ஆயினும் அச்சந் தவிர்க்க! 210
பொங்கும் அன்பொடு பொன்னுடல் என்கைப்
புதைக்க! நாளையே புல்லறி வாளனைச்
சிதைக்கின் றே'னெனச் செப்பியே, வள்ளியை
அணைக்க வெண்ணி அணிப்பூம் பாவையே!
பிணைக்க வருவாய் பேடை யன்னமே!'

என்று பேசி இருங்குழற் கோதையை,
அண்டினன்! அக்கால் யாரோ கதவினைத்
தளிர்க்கொடி நெஞ்சுபோல் தட்டி முழக்கினர்.
குளிர்மிக வேந்திய குருவியைப் போலவன்
குறுகிக் குமைந்தனன்; கோதையோ 220
அருகி லோடியத் தாழ்திறந் தாளே!

— o —

# இயல்: 23

உரங்கொளும் மகளிர் தம்மை உருக்குலைத் திடுதல் நல்ல
திறங்கொளும் ஆண்கட் கென்றும் எளிதிலை

திறந்ததும் கண்ட காட்சி
திகைப்புற வைத்த தே!முன்
மறந்தொடு நெஞ்சைக் கொண்ட
மருகவொழுந் தோடவ் வூரிற்
சிறந்துள நீதி மன்றைச்
சேர்ந்துள புலவர் நின்றார்!
பிறந்ததோ ராணை! சென்று
பிடித்தனர் அவனைச் சில்லோர்! 1

மருக்கொழுந் தருகில் சென்று
மலர்க்கொடி அஞ்சி நின்றாள்!
உருக்குலை யாத நெஞ்சை
ஒருங்குற அவளை ணைத்தாள்!
'செருக்குளான் வாயா லேயே,
சிக்கலின் றவிழ்ந்த தென்று'
மருக்கொழுந் தியம்ப, நின்ற
மன்றமும் மகிழ்ந்த தேற்று! 2

கருப்பனை யழைத்துச் சென்றார்;
கண்காணிப் பாளர்! அன்னோன்,
ஒருப்படான் போலத் துள்ளி
உலைத்தனன்! 'தீமை செய்வான்
உருப்படான் 'என்றவ் வுள்ளம்,
உரைத்தது! மன்றத் தாரும்
விருப்பொடு விரைந்தார்! வாழும்
வீணனைப் பிடித்தோ மென்று! 3

காலையிற் கூடும் மன்றம்
'கண்ணையன்' வழக்கைக் கூறும்!
சேல்விழி மங்கை மாரே,
'சென்றங்கு வருக!' 'வென்று,
நூலறி வாளர் கூற,
நுண்ணிடை யோர்கள் அந்த
வாலறி வாளர்ப் போற்றி
வணங்கிய வாறு சென்றார்! 4

செல்வுழி மருக்கொ ழுந்தச்
சேல்விழி நோக்கி, 'கண்ணே!
கொல்வழி செய்தே னென்று
கொண்டனை யோ'வென் றோத,
'வெல்வழி யீதென் றாலும்
வேறொரு வழிகா ணீரோ!
அல்வழி எற்றுக்' கென்ன
அகல்விழி ஈதைச் சொன்னாள்; 5

'உரங்கொளும் மகளிர் தம்மை
உருக்குலைத் திடுதல் நல்ல
திறங்கொளும் ஆண்கட் கென்றும்
எளிதிலை! திருவி ளக்கே!
அறங்கொளும் நெஞ்சு தன்னை,
அழிக்குமே யன்றிக் காத்த,
அறங்கெடும் செயலுக் கென்றும்
ஆட்படா தென்று ணர்வேன்! 6

உன்னுள வுரமே இந்த
உயிர்தரும் வினையை வென்று,
மன்னிசை தந்த' தென்று
மருக்கொழுந் தியம்ப, வள்ளி

'என்னுயிர் போகா தென்றே
    எங்ஙனம் அறிந்தீர்' என்ன
'உன்னுயிர் துறத்தற் கன்னோன்
    ஒருப்படான்; அறிவேன்' என்றாள்! 7

'இன்னவா றோர்ந்து தானே
    இவ்வினை மேற்கொண் டேன்;வா
உன்னவர், உன்றன் உள்ளம்,
    உன்னுயிர்ச் சிங்கன், மற்றும்
பொன்னருங் கிழவர் தம்மைப்
    போயடை வோமே' என்று
சொன்னவா றவளைக் கூட்டிச்
    சென்றனள் குடிலை நோக்கி 8



# இயல் : 24

ஏறு போலவன் எங்கிருந் தோ,மிக
ஊறு செய்திட ஒருநாள் வந்தான்!
வேறு யாருமன் றன்னவன், அன்றெனை
மீறிப் போனவன் தானடி தோழியே!

நோக்கிச் சென்றவர் நெருங்கிடக் குடிலில்,
தேக்கிய அமைதி திகழ்ந்தது! கண்டே,
'அம்மா! தாத்தா அடைந்த கவலையால்,
எம்மா மிடியினை ஏற்றுளம் இடிந்ததோ!
என்னைக் காணு தெங்ஙன் துடித்ததோ?
பொன்னுடல் வருந்தப் போன தெங்ஙனோ?
இக்கொடும் பெண்ணால் இக்கொடுஞ் செயலால்,
மிக்கொடும் நினைவொடு, ஐயகோ! மாண்டரோ!
அடிமே லடிபோல் ஆற்று வகையில்
மிடிமேல் மிடிவர மீளா தாகிய 10
வகைகண் டெங்ஙன் வாதையுற் றாரோ?
பகையினுங் கொடியதாய்ப் படர்ந்த துன்பச்
சூழல் அவரைச் சுருட்டிக் கொண்டதோ?
வீழும் ஆலென வீழ்ந்திறந் தாரோ?
என்வாழ் விடிந்ததோ! எங்குச்சென் றாரோ?
என்வாழ் விடிந்திடில் எங்ஙன் உய்வனோ?
ஐயகோ!' வென்றே ஆய்மயில் அலறப்
பைய அவள்தோள் பற்றிய வாறாய்
'வள்ளி! உன்மெய் பதறிட நடந்ததோ,
உள்ளிப் பார்க்கின் ஒன்றிலை! தாத்தா 20
எங்கோ சென்றுளார்! இங்கினி வருவார்!
அங்கண் ணீர்வடித் தழுவதில் என்பயன்?
'நடவா தொன்றை நடந்திடு மென்றும்,
கடவா வொன்றைக் கடந்திடு மென்றும்,

எண்ணி வருந்திடும் இடர்அச் செயல்தமை
நண்ணிடும் இடர்போல் நானூறு பங்காம்!
அவலம் விடுகெ'ன அவளைத் தேற்றினள்,
பவளம் பழிக்கும் பனியிதழ்! பின்னை
இருவரும் அமர்ந்தனர்! ஏதோ நினைத்து,
'வருகின் றே'னென வள்ளி எழுந்து, 30
கொல்லைக் கோடிக் கொழுமலர் மல்லிகை,
முல்லைக் கொடிகளில் மொய்விழி மொய்த்து
மீண்டனள்! அதற்குள் மீண்டார் கிழவர்!

மூண்ட மகிழ்வொடு கிழவர் பாலாய்
ஓடிச் சென்றவள் 'என்னுயிர்த் தாத்தா,
வாடினன் உங்களின் வருகை காணாது
என்றனள்! அவரும் 'என்னருங் கிளியே!
சென்ற தெங்கெனச் செப்பாது சென்றனை!
உன்றன் துணிவை உரைக்க வொல்லுமோ!'
என்ற வாறங் கெழுந்து நின்ற, 40
மருக்கொழுந் தாளை மருள நோக்கி'இச்
சுருட்குழல் யாரெனச் சொல்வாய்' என்றார்!

'அறிவால் அகன்றஇவ் வம்மை தன்னையும்,
விரிவாய் நடந்த வேறுள செய்தியும்,
அறிவிக் கின்றேன்; அணிக்கால் தூய்மை.
புரிந்து வருக! போயமர்ந் திடுவோம்'
என்றே அவள்தண் ணீரெடுத் தீய
'நன்றே' என்றவர் நலமுடித் தவராய்ச்
சென்று திண்ணையைச் சேர்ந்தார்;

வள்ளியும்
கொன்றை நிறமருக் கொழுந்தும் அவர்முன் 50
அமர்ந்தனர்; அவரோ, 'அம்மா உன்னுளம்
படர்ந்த வருத்தம் பாய்ந்தது முகத்தில்!
இடர்ப்பல பட்டிருப் பாய்"என எண்ணுகின்

றேன்'என மருக்கொழுந் தின்பாற் சொன்னார்!
'ஆம்'எனு மாறவள் அசைத்தனள் தலையை!

இதன்மேல் அந்த ஏந்திழை பழங்கதை
அனைத்துங் கூறி, 'ஐய, என்குடும்பம்,
அழிந்த பின்னர்யான் என்கற் பதனைப்
பிழிந்த கருப்பன் கால்களைப் பிடித்துக்
கெஞ்சிப் புரண்டு கிளையழிந் தவட்குக் 60
கஞ்சியும் கட்டக் கால்முழத் துணியும்
தந்து வாழ்வினைத் தருகெனக் கேட்கச்
சிந்தை திரும்பினன்.

சின்னாட் குள்ளே,
ஊரிற் சிலருக் குரைத்தென் மணத்தை,
நேரில் முடித்தேன்! நானும் அவரோ(டு)
ஒப்ப நின்றவர் உரைத்திடு முன்னர்
எப்பணி யாயினும் இயற்றியும் அவர்பால்
அடங்கிக் கிடந்தும், அவர்செயுஞ் செயல்கட்(கு)
இடர்செய் யாமலும் இருந்தேன்; சின்னாள்
கழிந்ததும் என்பால் கருத்தை யிழந்து, 70
பழித்தனர்! என்னைப் பார்க்கவும் ஒவ்வாது,
தனித்தொரு குடிலில் தங்கிடச் செய்து,
தனித்தவர் வாழ்ந்தார்!

தளிர்க்கொடிப் பெண்கள்
ஒவ்வொ ரிரவையும் உயர்ந்த இரவாக்க
எவ்வொரு நினைவும் இழந்தவ ராகி,
என்னை மறந்தார்! ஏதோ நேற்றுத்
தன்னை மறந்து தனியவள் வாழுங்
என்குடி லடைந்தே என்னுடன் மகிழ்ந்துபின்
அன்போ டென்னை அணுகி, வள்ளியின்
எழில்நல முரைத்தும் இதனால் வந்த 80
பழியைக் கூறியும் பண்ணிய கொலையையும்
எடுத்துக் கூறினார் எக்களிப் போடு!

கெடுத்திடப் போகும் கொடுமனம் தன்னை
நன்று யுணர்ந்தேன்! நல்லவர் நடத்திய
மன்றச் செய்தியும் முறையோ டறிந்தேன்!
நீதியை மயக்கிய நிலையில் நான்போய்ப்
பீதியைக் கிளப்பினேன்! பின்னர் நடந்ததை;
வள்ளி கூறுவ' ளென்றிட,

வார்குழல்
துள்ளிய வுணர்வோடு தொடர்ந்து; மருக்கொழுந்
திட்டுச் சென்றதும் இழிமனத் தவன்பால்; 90
விட்டுச் சென்றதும், வீணன் அவள்கற்
பழிக்கமுற் பட்டதும்; அக்கொடுஞ் செயலை
ஒழித்திட மன்றம் ஓடி வந்ததும்,
தன்பால் இயம்பிய தருக்குச் சொற்களை
வந்தவர் கேட்கும் வகையைச் செய்ததும்,
இதனால் கருப்பனை இட்டவர் சென்றதும்,
சிதறிய நீதி ஒன்றாய்ச் சேர்ந்ததும்,
எடுத்துச் சொன்னாள்!

கிழவர் ஏதும்
தடுத்துக் கேளாத் தன்மையில் இறும்பூ
தெய்திய வாறாய், 'எனையறி யாமல்
எய்திய இடுக்கண் இவையோ' என்றே 100
அசைவற் றிருந்தார்!

அக்கால் சிங்கன்
பசையற் றிருந்த பாழ்நிலம் பாயும்
நீர்போல் விரைந்தான்! நீள்கண் வள்ளி
சோர்விடை இன்பஞ் செறிவது போலாய்
மலைத்தோள் கண்டே மலைத்தாள்! உள்ளம்
இளைத்தவட் கந்நொடி ஏற்றம் பெற்றது!
பெரியவர் அறியார் போல்நடித் தார்அவள்
உரியவன் வந்த உவப்பை அடக்கி!

எழுந்து நின்றனள்; இவள்தன் னெடுமருக் 110
கொழுந்தும் நின்றுள்! கோதை கிழவர்க்
குணர்த்தும் வகையில் ஒருநொடி தாழ்த்தி,
புணர்ந்த நெஞ்சினைப் பார்த்தக முவந்து,
'தாத்தா! இவர்தான்...' என்று தயங்கிடப்
பூத்தது வியர்வை, பொற்றொடி முகத்தில்!

'யாரம் மாயிவன்? யாங்கிவன் வந்தான்?
கூரம் பேபோல் கொல்விழி நங்கையர்
தனித்துள இவ்விடம் தருக்கன் வந்ததேன்?
பிணித்திடு வீரிப் பெருமரந் தனி'லென்று
முதியவர் நடித்த முறையைச் சிங்கனும் 120
அதிவிரை வாயறிந் தேதும் அறியான்
போலிருந் தவனைப் பூவை கண்டு
வேலருஞ் சொற்களால் விதிர்ப்புறு வானென
எண்ணி நடுங்கினள்!

இவனை மருக்கொழுந்
தன்றே மன்றில் அறிந்துளாள்; அதனுல்
'வள்ளியும் சிங்கனும் வைத்த காதலை
எள்ளள வாகிலும் இவரறி யாரோ?'
'என்ன நடக்குமோ' என்றிடர்ப் பட்டாள்!
புன்னகை பூத்துப் பொலியும் முகத்தைக்
கண்ணீர் வந்து கருக வைத்தது! 130

வள்ளியின் வாட்டாம் வளர்ந்திடக் கிழவர்
உள்ளம் மகிழ்ந்தார்; எனினும் உரம்விடா
திருந்தவர் பாலாய் இருங்குழற் கோதை
அருந்திறல் மறமும் அறிவுங் கொண்ட
பெருந்திறல் நெஞ்சின் பேரர சாகி,
என்னை ஆண்டிட விருக்கும் இவர்தான்
முன்னைக் கூறிய மூதறி வாளர்;
தாத்தா! இவரே தாமச் சிங்கன்!
பூத்து விளங்கிய பேரறி வாள'ரென்

றியம்பி நின்றனள். எதிர்நின் றவனைத் 140
தயங்கி நோக்கித் தலைமுதல் கால்வரை,
ஒவ்வொ ருறுப்பா யொவ்வொரு வளைவாய்,
ஒவ்வ நோக்கியும் ஒண்டொடி நோக்கியும்,
ஏதோ சிந்தித் திருப்பார் போலும்
ஏதோ முடிவினைக் கண்டார் போலும்
தலையினை யசைத்தார். தளிர்க்கொடி | விழியும்
நிலைநின் றவிழ்ந்த நித்திலம் போலக்
கண்ணீர்த் துளிகளைக் கன்னத் துதிர்த்தது!
பின்னர்க் கிழவர் பேசிடு கின்றார்!

'எந்த வகையிலும் இவனுன் அழகினுக் 150
கேற்றவ னல்லன்; இவனை மணக்கற்
கிறந்த கண்ணையன் ஏற்றம் வள்ளி!
சிறந்த அழகுடைச் சேயோன் ஆகிய
என்மகன் ஒருவன் இருந்திட இங்குள
புன்மகன் தன்னைப் போகச் சொல்லுக!'
என்று நடித்தவா றியம்பிட, இடிக்குக்
குன்று குலுங்குதல் போலவள் குலுங்கித்
தேம்பி யழுதனள்; திகைத்த மருக்கொழுந்
தோம்பினள் அவளை!

உடனே சிங்கன்
ஏகிட எத்தனித் திடுவோன் போன்று 160
பாகியல் மொழியைப் பார்த்ததும், பைங்கிளி
'என்னருந் தாத்தா, என்னுயிர் காத்ததும்
பின்னரு மன்னையாய்ப் பேணி வளர்த்ததும்
இதற்கோ! ஈங்குள இன்னுயிர் விருப்பனைக்
கைதரக் கேட்குங் கண்ணீர் அறியிரோ!
நுவலுக அவன்பால் நோக்கொடு வருந்துதல்
அவலம் அன்றெனை அறிகுவி ராயின்
இதனினும் பெரும்பே ரின்பம் எதிர்ப்படச்
சிதறும் என்னுயிர் விரைந்'தென விக்கி,
அழுதனள். 170

அன்னை அற்றவள் தன்னை
'அழாதே' எனமருக் கொழுந்தழு தாளே!
நெகிழா துள்ள நெறியமை முதியவர்,
மகிழா நின்ற மறைவெளிக் காட்டா
'தென்னினும் பெரிதோ இவனிடத் துன்னுயிர்
பின்னிய வன்பே, பேசுக!' வென்னக்
'கடவுள் என்றோர் கற்பனை யிடத்துப்
படர்ந்த அன்பினும் பல்வகைப் பெரிதே!
உயிரோ டுளமும் ஒருபாற் பட்டுக்
குயிலிய உருவும் கொள்ளும் என்னின்,
ஒப்பில் லாதாய் ஊறிடுங் காதல், 180
எப்பொருள் தன்னிலும் ஏற்ற தாகுமே!

என்னுயிர் காக்கின் ஈருயிர் காப்பீர்!
மன்னுக என்றும்! மாணப் பெரியீர்!
அன்பைப் பேணுக! அன்பைப் பேணுக!
என்பை நெகிழ்க்கும் அன்பைப் பேணுக!'

-என்று கதறி யிருங்கொடி சாய்ந்திட
நின்று தாங்கினன் நெடுந்தோட் சிங்கன்.
'பொலபொல' வென்றே பெரியவர் கண்களில்
நீர்த்துளி நிரம்பிட, நெடுங்கண் மருக்கொழுந்
தெழுந்தோர் புறமாய் ஏகினள்! சிங்கன் 190
கொழுந்துடல் தூக்கிக் கிடத்தினன் தன்மடி!

நீர்கொணர்ந் தெழில்மறை நிகர்க்கும் முகத்தில்
சீர்செய அன்னவள் சிறுவிழி திறந்து
சிங்கன் தன்முகம் நோக்கிச் சிரித்தனள்!

'பொங்கு தாமரைப் பூவே! எழு'கெனக்
கிழவர் மொழிந்தார்! கிளியுட னெழுந்து
மழவன் தன்னொடும் மயங்கி நின்றிட
'அம்மா! உன்னரும் அணிகா தலனே
என்றன் மகனென' இறுத்திட, வள்ளி,
திருடிக் கொணர்ந்த தேறல் தன்வீட்டுப் 200
பொருளாய்ப் போன போக்காய் உவந்தே,

அன்னை அற்றவள் தன்னை
'அழாதே' எனமருக் கொழுந்தழு தாளே!
நெகிழா துள்ள நெறியமை முதியவர்,
மகிழா நின்ற மறைவெளிக் காட்டா
'தென்னினும் பெரிதோ இவனிடத் துன்னுயிர்
பின்னிய வன்பே, பேசுக!' வென்னக்
'கடவுள் என்றோர் கற்பனை யிடத்துப்
படர்ந்த அன்பினும் பல்வகைப் பெரிதே!
உயிரோ டுளமும் ஒருபாற் பட்டுக்
குயிலிய உருவும் கொள்ளும் என்னின்,
ஒப்பில் லாதாய் ஊறிடுங் காதல், 180
எப்பொருள் தன்னிலும் ஏற்ற தாகுமே!

என்னுயிர் காக்கின் ஈருயிர் காப்பீர்!
மன்னுக என்றும்! மாணப் பெரியீர்!
அன்பைப் பேணுக! அன்பைப் பேணுக!
என்னை நெகிழ்க்கும் அன்பைப் பேணுக!'

-என்று கதறி யிருங்கொடி சாய்ந்திட
நின்று தாங்கினன் நெடுந்தோட் சிங்கன்.
'பொலபொல' வென்றே பெரியவர் கண்களில்
நீர்த்துளி நிரம்பிட, நெடுங்கண் மருக்கொழுந்
தெழுந்தோர் புறமாய் ஏகினள்! சிங்கன் 190
கொழுந்துடல் தூக்கிக் கிடத்தினன் தன்மடி!

நீர்கொணர்ந் தெழில்மரை நிகர்க்கும் முகத்தில்
சீர்செய அன்னவள் சிறுவிழி திறந்து
சிங்கன் தன்முகம் நோக்கிச் சிரித்தனள்!
'பொங்கு தாமரைப் பூவே! எழு'கெனக்
கிழவர் மொழிந்தார்! கிளியுட னெழுந்து
மழவன் தன்னொடும் மயங்கி நின்றிட
'அம்மா! உன்னரும் அணிகா தலனே
என்றன் மகனென' இறுத்திட, வள்ளி,
திருடிக் கொணர்ந்த தேறல் தன்வீட்டுப் 200
பொருளாய்ப் போன போக்காய் உவந்தே,

'ஏறுபோலவன் எங்கிருந் தோமிக
ஊறு செய்திட ஒருநாள் வந்தான்!
வேறு யாருமன் றன்னவன், அன்றெனை
மீறிப் போனவன் தானடி தோழியே!'

என்றே மெல்லென இன்குர லிசைத்தாள்!
சென்றவள் இடையினைச் சேர்ந்தனன்; உடனே
கன்னத் தறையக் கைவிரைந் தோடப்
பின்னுக் கிழுத்'தென் பொன்னத் தானிதைக்
கேட்டீரோ' வென்றாள்; கேளா தவன்பால் 210
வாட்டிப் போன வன்கதை கூறவும்,
சிங்கனும் அந்தச் சேயிழைக் குறவெனத்
தயங்கி கதையைத் தானுரைத் திட்டபின்
பொங்கிய மகிழ்வொடு புத்துற வாகிய
திங்கள் முகத்துத் தெரிவை கொல்லைக்கு
எழுந்து நடந்திட இவனும் செல,மருக்
கொழுந்துங் கிழவரும் கொஞ்சுங் கிளிகளைக்
கண்டு மகிழ்ந்தனர்!

கடிமலர்க் கோதை
அன்று பூத்ததோர் அழகிய முல்லையைப்
பறித்து முகர்ந்த குறியைப் பார்த்தவன், 220
மறித்து நின்ற மலர்க்கொடி நீக்கி,
எட்டித் தெரிவையின் இடையைத் தொட்டுக்
'கட்டிக் கரும்பே! கன்னம் காட்'டெனக்
காட்டுவாள் போலவள் கன்னம் காட்டிட,
நீட்டுவான் போலவன் தன்னிதழ் நீட்டிட,
'வெடுக்'கென வேற்கண் பின்னுக் கோடியே
அடுக்கிய முல்லையின் அழகைக் காட்டினள்.

'துடுக்குப் பெண்ணே! தொலைவில் நின்றெனை
உறவு காட்டினை! உன்னுற வானபின்
பிரிந்து செல்லுவ தேனெனைப் பிணைகவே! 230
என்றவன் கூறிட ஏந்திழை பாடினள்!

(வேறு)

மாலைப் பொழுதிருக்க! மஞ்சள் வெயில் சூழ்ந்திருக்கத்
தோளைப் பிடிப்ப தென்னவோ!—ஒளி
வேளை மறப்ப தென்ன வோ?

தோழி யுடனிருக்கத் தொல்லை வந்து காத்திருக்க,
நாழி பொறுக்கு திலையோ?—ஒளி
ஆழி மறைவ திலையே!

திறந்த வெளியிருக்கத் தந்தையும் நம் மோடிருக்க
பறந்து வருவ தென்னவோ?—நிலை
மறந்த வகைதா னென்னவோ?

மாலை யொழிந்துவிடும்; மற்றுமிருள் போர்த்துவிடும்;
காலை மலரும் வரையே—இரு
கைக்குள் அடக்க மல்லவோ?

பாடல் முடிந்ததும் பைங்கிளி அவன்கை
ஓடி விழுந்திட, ஒளிமுகத் திதழைப்
பதித்தவன் இரவு படர்ந்திடப் போகும்
இன்பியற் கெடுத்துக் காட்டாம் இது'வென
நவின்று நகைத்தான்; நங்கையும் அவனும்
இன்ன வாறாங்கே ரிருந்திடப்
பொன்னிறப் பரிதியும் போந்தது மேற்கே!

# இயல்: 25

கற்றவர் தாமும் கல்லார் போலவே
உற்ற பிறப்பிற் கடிபணிந் துழல்வர்!

*மேற்கு வானத்து மிளிர்ந்த செம்மையை*
*ஏற்கும் கன்னத் தெழில்மருக் கொழுந்தின்*
*உள்ளத் தேயிவ் வுலகைக் கவ்விய*
*வெள்ளத் திருளும் விரைந்து படிந்திட,*
*எதையோ வெண்ணி ஏங்கிய வாறுய்*
*வதைசெய் நெஞ்சின் வாட்டம் ஏற்றுக்*
*குலையா வெழில்புனை கலைஞன் வடித்த*
*சிலையாய் ஒருபுறத் தோங்கிய சிந்தனை*
*அவனை அமுக்கிட அமர்ந்திருந் தனனே!*

*கவலை உந்துங் காரணம் என்னென்(று)* **10**
*அறிந்திட வள்ளி அவனை அணுகி*
*'செறிந்த தமிழ்நாட்டுச் சீரெலாம் மாய்ந்த*
*வகைபோல் உற்ற வாட்டம் ஏ'தெனப்*
*'புகையும் நெஞ்சின் புன்புகை வந்துன்*
*துளிர்த்த மகிழ்வைத் தொலைத்திட நாடுறேன்!*
*கண்ணின் பாவையே! கண்ணீர் வார்த்துக்*
*காத்த காதலுக் கானவர் தம்மொடு*
*பூத்த மகிழ்வில் புதையா தென்னுளம்,*
*எரிந்த சாம்பலை ஏனெனக் கிளறின்*
*பொறிந்த தீவெளிப் புறப்படும் போ'என்று* **20**
*நீர்வடித் தியம்பி நின்றிட, 'மாண்டவென்*
*சீர்வடித் தீந்தனை; சிறியோள் நானுனக்*
*காற்றுவ தெவ்வள வாகிலும் ஈடிலை!*
*மாற்றுக நின்மிடி; மனத்தின் உறுத்தலை,*
*என்பா லுணர்த்துக' வென்றெழ வைத்துத்,*

தன்தோள் சார்த்தித் தன்குடில் சென்றாள்!

கொள்ளைப் போலும் கொளுத்திய விளக்கின்முன்
பள்ளிப் பிள்ளைகள் பரவினர் போல
மருக்கொழுந் தோடு,அம் மங்கையும் அமர்ந்தாள்!
பெருக்கிய துன்பத்துப் பிணைந்த சிங்கனும் 30
முன்னால் அமர்ந்தான்; முதுகினைச் சாய்த்துப்
பின்னால் உள்ள பிடிச்சுவர் அடியில்
பெரியவர் அமர்ந்தார்; பேசினாள் வள்ளி:

"உரிய காரணம் ஒன்றும் இன்றி,
வருந்துவ தெங்கள் வாட்டம் போக்குமோ?
அருந்திய உணவும் அற்றது எனும்படி
உன்றன் வருத்தம் ஏதென உணர்த்துக'
-என்றே வினவுக இவளிடம் அத்தான்"-
என்று மொழிந்தாள்; ஏற்று, அவன் கூறினான்;

'அன்பை வாழ்வின் அணியெனக் கொண்டு 40
துன்பம் எய்திய ஞான்றும் துவளாது
வெற்றி கண்டனை, அம்மா! வெந்திடும்,
பெற்றி யாயஉன் பெருமிடி தன்னை
எம்பால் உரையா வருத்தம் என்னெ'னக்
கேட்டான்; இச்சொல் கிள்ளையைத் தேற்றிட
வாட்டம் உற்ற வகையினைக் கூறுவாள்;

'அண்ணா! என்னுளத் தமைந்த தெல்லாம்,
பெண்ணாய்ப் பிறந்த பெருமிடி யொன்றே!
நலிந்த வாழ்வில் நசித்திடு வோர்கள்,
வலிந்த மக்களால் வாழ்விழக் கின்றார்! 50
ஆணாய்ப் பிறந்தவர் ஏழையர் ஆகில்
வீணாய்ப் போவதை விடவே றில்லை!
மக்களுள் மாக்களாய் மாண்டிட வேண்டும்!

தக்க திறமையும் தன்னறி வும்மிகப்
பெற்றவர் கூடப் பிறப்பினில் தாழ்ந்தால்
உற்ற இழிவுக் கொருமுடி வின்றிச்
செல்வரைத் தாங்கிச் சிறுபுழு வாகி,
*ஞொள்குதல் தவிர உய்வொன் றில்லை!

பெண்கள் ஏழையாய்ப் பிறந்திடில் அவர்படும்
புன்மிடி தன்னைப் புகலவும் வேண்டுமோ? 60
கற்றவர் தாமும் கல்லார் போலவே,
உற்ற பிறப்பிற் கடிபணிந் துழல்வர்!

இப்பெருங் கொடுமை ஏற்றம் பெற்றஇம்
முப்பே ரரசர் முரசொலி நாட்டில்,
தாழ்பிறப் பெய்தித் தளர்வாழ் வேற்ற
சேல்விழி மாதர் சிறத்தல் எங்ஙன்?

கருமைச் சாதிக் கிடையிற் பிறந்தேன்;
வறுமை நீரில் வளர்ந்தேன்; வளர்ந்து
மலர்ந்த நிலையில் மதமிகு யானையின்
உலர்ந்த நாவிற் குண்ணீர் ஆனேன்! 70
என்னைப் பிணைத்த எங்கள் குடும்பம்,
புன்னைப் பல்லியின் பொடிமுட் டைபோல்
சிதறிச் சிதைந்தது. சீரிழந் தென்னை
அழியாது விட்டதே அன்னவன் மனமும்!

ஏலா நிலையிலும் என்போ லொருத்தி,
வாழும் குலக்கொடி வள்ளியின் வாழ்விற்
சூழ்ந்த துயரைச் சுட்டெரித் தேனே!
ஆயினும்,
ஒன்றென் உளத்தை உறுத்திடு கின்றதே!

அன்றென் வாழ்விற் காவன செய்தவர் 80
தீய வுளத்தவர் ஆயினும் திகழ்ந்து,

*ஞொள்குதல்—குலைதல்

வாய்ந்த மனைவியாய் வந்தபின் அவரை
அன்பொடு பேணி, அடக்கம் பணிவெனும்
பண்பொடு பழகிப் பயன்துய்ப் போமெனும்
எண்ணம் என்னுளத் திருந்த வகையினுல்
நன்னிலம் ஆக்க நாளும் உழைக்கும்
உழவன் போலவர் ஊறுளம் களைத்துப்,
பழமை திருத்திப் பயன்கண் டுள்ளம்
மகிழ லாமெனும் மாமனங் கொண்டேன்!

கண்ணையன் தன்னைக் கொலைசெய் தவராய்ப் 90
பெண்ணை வருத்திய பிழைசெய் தவராய்,
நானே அவரை நாட்டிட முயன்றேன்!
வீணே வாழ்வை வெட்டி வீழ்த்தினேன்!

என்பயன் கண்டேன்! இனியென் வாழ்வு
புன்பயன் காணும் பெற்றியி னல்லது,
வேறென் காணும்? வேறென் காணும்?
யாரென் வாழ்வை எடுத்து நிறுத்துவார்?'

-என்று வருந்தித் துடித்தனள், வீங்கிய
குன்று தோளனைக் குழைந்து நோக்கிய
வள்ளியின் முகத்தில் வாட்டம் தெரிந்ததே! 100
அள்ளிய வருத்தத் தலைந்தவன் கூறுவான்:

'செம்மா துளமெனச் சிவந்த கண்ணுடை
அம்மா இதுகேள்! அன்போ டறனும்
பூண்டிவ் வுலகைப் புதுக்கின ரெல்லாம்
நீண்டொரு புகழை நாட்டின தல்லால்
கண்ட பயனிலை! காரிகை உன்போல்
கொண்ட தவற்றைக் கொண்கன் புரியினும்
ஒறுத்த ஒண்டொடி ஒருவரு மிலரே!
அன்ன புகழுக் கானநின் னுள்ளம்
இன்னணம் வருந்துதல் என்ன பற்றியோ? 110

அவனுக் குரியவள் அல்லள்நீ: அன்புடை,
எவர்க்கும் உரியவ ளாயினே! கடந்த
உன்னருந் திறனை உன்னி உணர்வரேல்
பின்வருந் தீயரும் பிழைபிழை யாரே!'

என்று கூறிய இன்கருத் தவளுக்
கொன்றிய தாயினும் உற்ற வருத்தம்
ஏனோ அவளின் நெஞ்சை யிடித்தது!

'யானோ வொருத்தி! ஏழைப் பெண்ணதும்!
அண்ணா அவரை அழிய விட்டுநான்
மன்னுப் புகழை மன்னினும் தனித்தனி, 120
என்னா வாழ்குவன்; என்னவர் அழிவது
நன்றே யாயினும் நானவர் மாண்ட
பின்னர் வாழுதல் பெரும்பே ரிழுக்காம்.
ஆதலின் அவரை அழித்தல் நானினிச்
சாதலின் வேறிலை யன்றோ?' என்றனள்!

'கறுப்பனைக் கொல்வார் என்று கழறுதல்
நெருப்பில் லாமல் நெய்யுருக் கல்போல்
பொருளிலா ஒருசொல்! அச்சொல் போக்கி
வருவது நாளை வருவதற் குள்நாம்
யாதும் நினைத்தல் நன்றிலை;' யென்ன, 130
ஓதுவள் இவ்வாறு;

'உயர்ந்த அறிவில்
மூத்தோ ரே!இனி மூண்ட வழக்கில்
காத்திட வேண்டும் கருப்பரை! யானோ
அவருக் குரைத்தே அவரைத் திருத்தி
அவரோ டிணைந்தினி வாழ முயல்குவன்;
பொறையிற் பெரியோய்! வன்மனம் பூண்ட
கறையைப் பொறுத்துக் காப்பீ ரென்னுயிர்!'
என்று தேம்பிய இருங்குழல் தன்னை

நின்று தேற்றிய நெடுங்குழல் வள்ளி,
'அறிவுப் புலவர்க் காவன கூறி 140
அறிவித் திடுங்கள் அத்தான்; வாழ்வில்
தவறிப் போவரைத் தண்டித் தலினும்
அவரறி யாத அறிவுரை கூறிச்
செம்மைப் படுத்தலே சீராம்; இங்கிவள்
தன்னைக் கருப்பன் தன்னோ டிணைத்துச்
செம்மை வாழ்வுக் காவன செய்தல்
எத்துணைச் சிறப்பை யீந்திடும்! ஈருயிர்
செத்தழி வதினும் செழித்தல் சிறப்பாம்!
கல்வி யெடுத்துக் கள்ளியை அகற்றி,
முல்லை ஊன்றின் முளையாதோ' வென்றாள்! 150

இதுவரை இவர்களுக் கிடையில் நுழையாத
முதியவர் பேச்சை முடித்த வகையில்
'பித்தற் குரைக்கும் பேரறிவு கல்லில்
வித்து விளைக்கும் வீண்செயல் ஆகும்!
யாவற் றிற்கும் நாளை யடைந்திடும்
முடிவைக் கண்டு முனைவது நன்று!
படியா உள்ளம் படிந்த தாயின்
அதற்கும் வாழ்வாம்' என்றார்.
அதன்பின் அனைவரும் படுக்கை யேகினரே!



# இயல் : 26

அவர்மாண் டிடினும் அணியிழை வாழேன்
அவர்மீண் டிடினும் அவரொடு வாழேன்!

படுத்த பின்னரும் பாவையின் நெஞ்சுபுண்
படுத்திடத் துயிலாது படுத்திருந் தனளே!
தந்தையும் மகனும் திண்ணையை ஆண்டனர்.
சிந்தை வருந்துவள் சிந்தை யயர்ந்த
அந்தையல் தன்னோ டயரா திருந்தனள்;

எங்கும் அமைதி ஏற்றமுற் றிருந்தது;
கங்குல் விலகிய கவின்நிலா வானை,
அழகு செய்ததே! அகன்ற கண்ணோ(டு)
இழவு வீட்டெரி விளக்கா யிருந்தாள்,
மருக்கொழுந் தங்கே! மனமோ துன்பம் 10
நெருக்கிட நைந்தது;

'நாளை வழங்கும்
தீர்ப்பென் வாழ்வைத் தீய்ப்பதா யிருந்தால்
ஏற்பதென் னுள்ளம் இறப்பை முடிவாய்!'
என்று பலவா றெண்ணி இடிந்தே
ஒன்றும் முடிவிலா துறக்கம் ஒழிந்தனள்.

'நாளை கருப்பனை நன்னெறித் திருப்பி
மீளுதல் வேண்டினும் மக்கள் ஒவ்வார்;
அவர்தம் பிழையை ஒப்புதல் நடவா(து)
அவர்ஒப் பிடினும் அவரை விடுத்திட
மக்கள் ஒவ்வார்; மக்களும் ஒப்பித் 20
தக்கஎன் வாழ்வைத் தருவ ராயினும்
என்னோ டினியவர் இருக்க ஏற்பரோ?

என்றன் முடிவும் எனக்குத் தீங்கே!
அவர்மாண் டிடினும் அணியிழை வாழேன்!
அவர்மீண் டிடினும் அவரொடு வாழேன்!

இறப்பினும் சிறப்போ டிறந்திடு வேனே!
இருப்பின் வாழா தழிந்தொழி வேனே!
இவரொடு வாழா திருப்பின் என்னையார்
புரத்தல் கூடும்! புரப்பினும் அவற்குப்
பெருஞ்சுமை யாயுள பெற்றியும் இழுக்கே! 30

இத்துணை இடரும் இனிஉயிர் வாழ்ந்தால்!
செத்தழி வதனால் யார்க்கென் னாகும்?
இருந்து பலர்க்கிட ரிழைத்து வாழ்தலின்
இறந்து போவதே ஏற்றம் உடைத்தாம்!'

-என்று நினைந்தவள் அண்டையில் இருந்த
கொன்றை உடல்தனைக் குழைந்து நோக்கி,
'இக்கொடி வாழ்வில் இனிய தென்றலாய்
புக்கனன் சிங்கன்;இப் பாவை வாழ்தலிற்
பொருள்மிக வுண்டு! புன்னுடல் நானும்
இருள்வாழ் வேற்க இசைவ திழுக்கே! 40

சாதல் மேலெனச் சாற்றிய உளத்தொடு
தீதுண ராதோர் தெளிவறி வணங்கு
எழமுயன் றனளே! இதற்குளோர் சிற்றொலி
விழுந்தது காதில்! வெடுக்கென மீண்டும்
படுத்திமைப் படுத்தினள் பாவையும்! அதற்குள்
'மருக்கொழுந்' தென்றொரு மெல்லொலி கேட்டது.
'நறுக்'கென எழுந்தாள்; நடையில் யாரோ
நின்றிருப் பதனை நீள்கண் கண்டு
நின்ற வுருவை நிலைப்படுத் தும்முன்
'நான்தான் மருக்கொழுந்' தென்றதந் நிழலே! 50

ஆன்றவக் குரலை அறிந்ததும் மகிழ்வோ(டு)
'அத்தான்' என்றே அலறி ஓடினாள்!
இக்குரல் தன்னால் யாவரும் எழுந்தனர்.
வள்ளி நடுக்குற் றெழுந்தாள்; வள்ளியைப்
புல்லிய கனவைப் பிய்த்தவன் எழுந்தான்!

பேர்த்தியும் மகனும் பெரிய பந்தலில்
கோத்த கைகளாய்க் கொண்ட திருமணக்
கனவு பாதியில் நின்றிடக் கிழவர்
நனவை யேற்று நடப்பதை யுணர
எழுந்து வந்தார்; எதிரில் அணிமருக் 60
கொழுந்துங் கருப்பனும் கூடி நின்றனர்.

'கருப்பனா?' வென்றான் கனைகுரல் சிங்கன்!
'மருப்புனை மறவா! ஆ'மென மொழிந்தான்!
'கடிகா வலினைக் கடந்தனை யோ'வெனக்
கடிதோள் சிங்கன் கழறிட, 'ஆ'மெனக்
கருப்பன் மொழிந்தான்; கிழவர் வியந்தார்!

'சிங்கா! என்றன் சிந்தை திரிந்ததே!
இங்கிருந் தாலினி என்வாழ் வழியும்;
தூக்கி லிடவெனைத் துணியினும் துணிவர்
தேக்கிய அன்பனே! தீதின்றி வாழ 70
விரும்பி, நின்றேன்; விளைந்த காவலை
மீறி வந்தேன், மருக்கொழுந் தோடு
வேற்றூர் அடைந்தென் வாழ்வைக் கழிப்பேன்!

தப்பி வந்தனன்; தப்பென் றாலும்,
ஒப்பி உயர்ந்த உளத்தொடு வந்தேன்
வாழ்க்கைக் கணியாய் வனிதை தன்னொடு
வாழ்க்கை நடத்திட வேற்றூர் செல்வோம்!
என்று பேசினன்; ஏந்திழை மருக்கொழுந்
தொன்றுமொன் றெனவே உகுத்தனள் கண்ணீர்!

வேண்டாம் கருப்பா; விடிந்ததும் மன்றம் 80
பூண்டறி வாளரைப் போய்ப்பார்க் கின்றேன்!
தன்தீ துணர்வோன் தண்டனை ஏற்கான்!
நின்தீர்ப் பொழிக்க! நீங்கள் வாழ்ந்திட
நாங்கள் முயல்வோம்; நல்லன நடக்கும்;
தீங்கு செய்தவர் திருந்துதல் சிறப்பே!
கரந்து வாழ்தல் கடினம்! அன்றியும்
சிறந்த அறிவொடும் சீரொடும் வாழினும்
என்றும் அச்சம் இன்னுளந் தீய்க்கும்!
என்று மொழிந்தான்.

இதன்பின் வள்ளி,
'அண்ணு! வெளியூர் அடைந்து வருந்திடும் 90
முன்னுல் அதுபோல் முனேவது தீதென,
உணர்ந்தால் நீவீர் உரைதர மாட்டீர்!
புணர்ந்த செல்வமும், பற்பல வயலும்,
உடைய நீங்கள் ஓடியே, உண்ணவும்
அடையக் குடிலும் அற்றவ ராகி
எங்ஙன் வாழ்வீர்? எவ்வழி யாயினும்
தங்கும் இடர்களைத் தடுத்து வாழ்தலே,
சிறப்பை நல்கும்! சிந்தித் திடுக!' எனக்
கூறிடக் கொடிமருக் கொழுந்து கூறுவாள்;

'வேறிடம் போவதை விலக்கா தீர்கள்! 100
பெற்ற இழுக்கில் பெரிதாய் வருத்தம்
உற்றவ ருய்ந்திட உள்ளூர் தீதாம்!
வள்ளி! எங்களை விலக்கும் தன்மையின்
உள்ளத் தன்பின் உயர்வுவெளிப் பட்டதே!
அன்பே! நல்வாழ் வடைந்து வாழ்க்கையில்
பின்பொரு காலென் பைங்கிளி உன்னைப்
பார்க்க வரினும் வருவோம்; பணிமொழி
வார்த்த அன்பின் வழியில் வாழ்ந்திடின்
போர்த்த வறுமை இருளும் போகுமென்று

ஆர்த்த அறிவுரைக் காகிய நீங்கள் 110
வாழ்வீர்! நாங்கள் வருகிறோம்' என்றாள்.

பாழ்நிலை மாறிப் பணிவுள மேற்ற
கருப்பனை நிறுத்திடக் கிழவரும், மகனும்
விருப்பம் ஒவ்வா வினைகளை அவர்களுக்
கெடுத்துச் சொன்னவை எவ்வள வாகினும்
தடுத்துச் சென்றார்; தளிர்க்கொடி போகையில்
வள்ளியின் கன்னத்து வைத்த இதழ்களில்
கண்ணீர் முத்தாய்க் கண்டு வருந்தினள்.

இருப்பினும் அவளும் ஏற்றம் பெற்ற
கருப்பன் தன்னோடு கலந்து வாழ்ந்து, 120
வாழ்வின் பயனைச் சுவைக்க வனிதையின்
உள்ளத் துணர்விலோர் ஏக்கம் உருண்டது!
வெள்ளப் பயன்போல் வரும்பயன் தன்னை
மலர்மண மறியா மடக்கொடி அடைய
அலர்பல வேற்கினும் அவனொடு நடந்தாள்.

செருத்தோட் கருப்பனும் சிற்றிடை தானும்
ஒருதோள் பூண்டே உயர்ந்தடர்ந் துள்ள
சோலையிற் புகும்வரை சிங்கனும் வள்ளியும்
நூலிழை அசையாது நின்று பார்த்தபின்,
வள்ளி யெனுமக் கிள்ளையோ, 130
அள்ளும் கைக்குட் பட்டிருந் தாளே!



# இயல்: 27

அன்போ அறிவோ அற்றவ னொருவனைப்
பண்புடை யானாய்ப் பண்ணுதல் வீணே!

இருந்த வுருக்கலைத் திருந்த இருள்போய்த்
திருந்திய ஓவியம் திகழ்வது போல
ஒளிவெள் ளத்தில் உலகம் மூழ்கிடத்
துளிப்பனி நீரிற் றோன்றும் உருப்போல்
உள்ளத் தடக்கிய ஒண்டமிழ் அன்பு
வெள்ளம் வெளிப்பட 'விடிந்ததே அத்தான்!'
என்று வள்ளி எழுப்பிடும் முன்னர்
நின்றான் எழுந்து! நின்றுமுன் நின்ற
ஓவியப் பாவை ஒத்தவள் நோக்கினான்.

ஆவியும் உடலும் அறவறக் கலந்த 10
கடந்த இரவில் குலைந்த அழகுபோய்,
படர்ந்த அழகப் பாவை முகத்தில்
சிரித்தது! செழுமலர்ச் சிரிப்பில் சிக்கி,
பிரிந்திட வியலாப் பார்வை நீக்கி
வாயில் வரவொரு கூட்டம் வந்தது!
சேயிழை குடிலுட் சென்று புகுந்தனள்.

கூட்டத்து மன்றக் குரவரும் நின்றனர்.
நாட்டுவ தறியாள்! நடந்த இரவினில்
தன்வீ டடைந்த கருப்பனும் தளிர்க்கொடி
தானும் சென்றதைத் திறந்து சொல்லிட 20
நெஞ்சிடர்ப் பட்டது! நிகழ்த்துதல் பற்றி
அஞ்சி யிருக்கையில் அவர்களில் ஒருவன்
'கருப்பனும் அவன்மருக் கொழுந்தும்' —என்
உரைக்கும் முன்னரே, 'ஒருவரும் இங்கில்லை!'

என்றே சிங்கன் இடைமறித் திடவும்
நின்றவர் அவனை நீள நோக்கி,
'ஒன்றும் அறியார் போலுரைக் கின்றீர்!
சென்று நோக்குக! சிலைபோ லிருவரும்
மாண்டு கிடப்பதை;' என்றான் முன்னவன்!

'மாண்டன ரா'வென மும்முறை அடுக்கிடக் 30
கொல்லையில் இருந்து கிழவர் விரைந்தே,
*'ஒல்லையிற் செல்வோம்' எனவிரைந் தோடிட
வள்ளியும் அன்னவர், வழிதொடர்ந் தனளே!

வெள்ளிய அருவி வீழ்ந்த விடத்திற்(கு)
அருகில் நின்றதே அவ்வூர் குழுமி!
¶நெருநல் நடந்த நீண்டதோர் காட்சி
வள்ளியின் நெஞ்சினை வதைத்ததே! எழில்சேர்
கிள்ளையின் இன்மொழி கேட்டது செவியில்!
கூட்டந் தன்னைக் குறுகிட, உளத்தை
வாட்டுந் தன்மையில் வாழைத் தார்போல் 40
சாய்ந்து கிடந்தனள்; சேயிழை நெஞ்சில்
மாய்ந்தின் னுயிரைப் பருகிய வாளின்
பாதை தெரிந்தது; பக்கத் தவனும்
சிதறிய குருதிச் சேற்றில் புரண்டனன்.
அவன்தன் நெஞ்சில் அவ்வாள் இருந்ததே!

'இவளைக் கொன்றபின் இக்கொடும் நெஞ்சனும்
தற்கொலை செய்து தானிறந் திருப்பான்'
என்று பலபேர் இயம்பினர்; இறந்த
மருக்கொழுந் தின்ஒளி மதிமுகம் வள்ளியை
உருக்கிட நின்ற வொண்டொடி நினைப்பாள்: 50

'அன்புடை ஒருவனை அறிவுச் சொற்களாற்

---

*ஒல்லையில்—விரைவில்
¶நெருநல்—முன்னையநாள்

பண்புடை யாழுய்ப் பண்ணலும், பிறருடை
அறிவு கேட்பானே அன்புடைச் சொற்களால்
நெறிமுறைப் படுத்தலும் நிகழ்வன ஆகும்!

அன்போ அறிவோ அற்றவ னொருவனைப்
பண்புடை யாழுய்ப் பண்ணுதல் வீணே!

விளையாக் களர்நிலத் தூன்றிய வித்தின்
விளைவை வேண்டி வீணே மாண்டாள்!

வளையாக் குன்றினை வளைக்கவும், என்றும்
குலையாக் கற்பைக் குலைக்கவும், அம்பால் 60
எய்யா மானினை எய்யவும், என்போல்
கொய்யாக் கனிகளைக் கொய்யவும் வாழ்ந்த,
வீணன் இறந்தது வியப்பில்லை! அந்த
வீணன் தன்போல் வளையா ஒன்றினை
வளைக்க முயன்றஇவ் வஞ்சியின் செயலும்,
சிலைபோல் மாண்ட செயலும் வியப்பே'

என்று நீர்வடித் தியம்பி அழுதிட
நின்று கேட்ட கூட்டமும் நிலையின்றித்
தேம்பிடத் தெரிவையின் பிணமும்
'ஆம்!ஆம்' எனுமா றணிமுகம் சிரித்ததே! 70

முற்றும்.



# இந்நூல் . . . .!

0 வெண்பா, அகவற்பா, ஆசிரிய விருத்தம், இசைப்பாட்டு எனும் நால்வகைப் பாக்கள் விரவிவரக் கோத்த கவிதைப் பனுவல் இது...... சிறுகதைப் பொருளை ஒரு காவியமாக விரிக்க முயன்று, ஓரளவு வெற்றியும் பெற்றுள்ளார், இதன் ஆசிரியர்.

'கண் வைத்தீர்......... துடிக்க வைத்தீர்' என்பது போன்ற பாடல்கள், ஆசிரியரின் கவிதைத் திறனுக்கும், கற்பனை நயத்துக்கும் ஏற்ற சான்றுகளாம். இக்காலத்துப் பெரிதும் விரும்பப்படும் எளிய, இனிய செய்யுள் நடை ..... விருத்தப்பாக்களின் அமைப்பு இயற்கைச் சிறப்புடன் மிளிர் கின்றது......

'ஏழையாய்ப் பிறந்தோ ரெல்லாம்
இடரின்றி வாழ்தற் கில்லை;
ஏழையாய்ப் பிறந்தோர்க் கெல்லாம்
இடர்தராச் செல்வர் இல்லை!'
வாழையாய் எண்ணி யீனும்
அருங்கனி பெற்றுப் பின்னைப்
பிழைசெய் உலகு செய்யும்
பிழையினை ஒறுத்தல் யாரோ?"

"கல்லி யெடுத்துக் கள்ளியை அகற்றி
முல்லை ஊன்றின் முளையாதோ?"

— என்று வரும் இடங்களில் ஆசிரியரின் சீர் திருத்தக் கருத்துகள் தெளிவாயுள்ளன.

'தொத்திவரும் கிளிதன்னைப் போபோ என்று
தொங்குகின்ற பழக்குலைதான் கூறலுண்டோ?'
'புன்னையில் உள்ள சிட்டு,
போகாது தென்னைக் கென்றுள்!'

என்பதும்,

தாழம்பூவை— 'ஓலையின் மலர்' என்றழைப்பதும் ஆசிரியரின் புதுவழி வகுக்கும் திறனுக்கான சான்றுகளாம். கூறியது கூறலாகப் பல இடங்கள் உள்ளன; தவிர்க்கப் பெறலாம்.... பிற மொழிகளிலெல்லாம் தற்காலக் கவிதை, காவியங்களுக்குத் தக்க படைப்புகளைக் காணுகின்றார்கள். தமிழ் மொழியிலும் இத்துறை பேணப் பெறுகின்றது என்பதற்கு இத்தகைய நன் முயற்சி பெரிதும் வரவேற்கத் தக்கதாம்.

— அனைத்திந்திய வானொலி.
திருச்சிராப்பள்ளி. 28-5-56.

0 புதுமை மெருகு கலந்த காவிய நூல் கொய்யாக்கனி. இதனை எழுதிய துரைமாணிக்கம் அவர்கள் இக் காவியத்தின் மூலம் தம்மைப் 'பாரதிதாசன் பரம்பரையினர்' என்று நிலை நாட்டுகிறார்...... பல பல உவமைகளை நூல் முழுதும் அள்ளித் தெளித்துள்ளார் ஆசிரியர்.

'தொத்திவரும் கிளிதன்னைப் போபோ என்று
தொங்குகின்ற பழக்குலைதான் கூறலுண்டோ?'

என்ற கருத்தும் சொற்றொடரும், இனிமையாகவும் அழகாகவும் பொருள் பொதிந்தவாகவும் இருக்கின்றன.

... கவியரசர் **பாரதிதாசன்** அவர்கள் தந்துள்ள மதிப்புரை, நூலை அணி செய்கிறது. பேராசிரியர் ஞா. **தேவநேயப் பாவாணர்** அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

கவிதைப் பித்தர்கள் அனைவரும் வாங்கிப் படிக்க வேண்டிய நூல் இது. சிறந்த முறையில் எழுதிய ஆசிரியரையும், அழகிய முறையில் அச்சிட்டு வெளியிட்டுள்ள பாரதிதாசன் பதிப்பகத்தையும் பாராட்டுகிறோம்.

— 'தென்றல்' 13-3-56.

0 ... 27 இயல்களைக் கொண்டுள்ளது இக் காவியம். ஆசிரியர் ஒவ்வோர் இயலுக்கும் ஏற்ற தலைப்பைப் படிக்கச் சுவைதரும் வகையில் ஆக்கித் தந்துள்ளார்... சிறந்த பல கருத்துகளின் களஞ்சியமாக விளங்கும் நூல் கொய்யாக்கனி.

— தமிழ்நாடு. 30-4-56.

0 பழந்தமிழ் மரத்திலே புதுமலர்கள் பல பூப்பதுபோல் இக் காவியத்தின் கருத்துகளும் உவமைகளும் காணப்படுகின்றன. அகவல், விருத்தம், வெண்பா முதலிய பாக்களால் ஆகிய 'கொய்யாக்கனி' எனும் இக் காவியம், எளிமையும் இனிமையும் உடையது; ஆற்றொழுக்காய்ச் செல்லும் அழகிய நடை அமைந்தது. 'சிரித்தது வானம்; செங்கதிர் கையால் விரித்தது மலர்களை' என்பது போன்ற கற்பனை நயத்துடன் தொடங்கும் இந்நூல், அழகிய புது உவமைகளை இடையிடையே அள்ளி வீசுகிறது.

'வறியவர் கண்ணீர் போலப் பெய்ததே'

'நின்றவனைக் கண்டவுடன் தமிழின் பத்தை
நினைத்தவுடன் மகிழ்வுகொளும் புலவர் போல',

'படமேந்திப் பார்வையிட்டு மகிழ்வு கொள்ளும்
பயில்கலைஞன் போன்று'

—என வரும் உவமைகள் எண்ணி இன்புறத்தக்கன. செய்யுள் நடை மணிமேகலை, பெருங்கதை ஆகியவற்றை நினைவுறுத்துகின்றது. பண்டைப் பண்பாடும், புதுமை மணமும் விரவிப் பரிமளிக்கும் நல்ல காவியம் 'கொய்யாக்கனி'

— சுதேசமித்திரன். 3-7-59.

0